உங்கள் கேசம் அடர்த்தியின்றி
சக்தியின்றி இருக்கிறதா? உங்கள்
கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும்
ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...




செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரை வளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூ...

அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு

HES. G. 4. TM

இந்தப் படங்களை ஒரே ஒரு நிமிடம் மட்டும் பார்க்கவும். அதற்குப்பிறகு **15** ம் பக்கத்துக்குச் செல்லவும்.

# தமிழ் பரீட்சை!

:: ஜனவரி ::

| | | | | |
|---|---|---|---|---|
| ஞாயிறு | 5 | 13 | 20 | 27 |
| திங்கள் | 6 | 14 | 21 | 28 |
| செவ்வாய் | 7 | 15 | 22 | 29 |
| புதன் 1 | 8 | 16 | 23 | 30 |
| வியாழன் 2 | 9 | 17 | 24 | 31 |
| வெள்ளி 3 | 10 | 18 | 25 | |
| சனி | 4 | 11 | 19 | 26 |





ஆலயம் தொழுவது சாலவும் நன்று.
ஐயமிட்டு உண்.
ஓதுவது ஒழியேல்.
ஏற்பது இகழ்ச்சி.










விலைப் பட்டியல்

| | ரூ. |
|---|---|
| கத்தரிக்காய் | - 4·25 |
| வெண்டைக்காய் | - 1·75 |
| | - 4·00 |
| தக்காளி | - 2·50 |
| பீன்ஸ் | - 3·20 |
| கேரட் | |



# அப்பு போய் மயில் வந்தது!



சென்ற மாதம் ஏஷியாட் தடபுடலாக நடந்து முடிவு பெற்றது. அதன் காரணமாகவோ என்னவோ இப்போது துவங்கும் சர்வதேசத் திரைப்பட விழா வழக்கமாக ஏற்படுத்தும் பரபரப்பை ஏற்படுத்தவில்லை. டிக்கெட்டுகளுக்கு அடிதடி இல்லை. பார்க்கப் போனால் டிக்கெட்டுகள் விற்பனை பிரமாதமாக இல்லை.

விழாவும் வழக்கமாக நடக்கும் விஞ்ஞான் பவன் அரங்கிலிருந்து புதிதாகக் கட்டப்பட்டுள்ள ஏஷியாட் அரங்கத்துக்கு (ஊருக்கு வெளியே) போய்விட்டது.

இந்த விழாவில் பாகிஸ்தான் படம் ஏதுமில்லை. ஜப்பானும் போட்டியில் கலந்து கொள்ளவில்லை. இதுவரை ரஷ்யாவின் படம் எதுவும் வந்து சேரவில்லை. சைனாவின் படமான 'ட்ரைவ் டு வின்' போட்டியில் இடம் பெற்றிருக்கிறது. 'அதன் காரணமாக ரஷ்யா உத்சாகமாகக் கலந்து கொள்ளவில்லையோ?' என்ற கேள்விக்குச் செய்தித் துறை காரியதரிசி லால், ''அதெல்லாம் ஒன்றுமில்லை. படங்கள் வந்து கொண்டிருக்கின்றன'' என்கிறார்.

காந்தி படம் ஏன் திரையிடப்படவில்லை? லால் கூறியது: ''ஏற்கனவே இந்தப் படம் பிரீமியர், நிதி காட்சி என்று நடந்துவிட்டதால் பலர் படத்தைப் பார்த்துவிட்டார்கள். ஆகவேதான் அந்தப் படத்தைத் துவக்க விழாவில் போடவில்லை!'' காதுல பூ!

ஜனவரியில் விழா நடப்பதால் பல நாடுகள் நல்ல படங்களை அனுப்புவதில்லை. ஆகவே வருஷத்தின் பின் பாதியில் நடத்தப் போகிறார்களாம். இனிமேல் பிலிமோத்சவ் வருடா வருடம் நடக்குமாம்.

போட்டியில் 21 படங்கள் கலந்து கொள்கின்றன. உத்பலேந்து சக்ரவர்த்தி டைரக்ட் செய்த வங்காளப் படம் 'சோக்' இந்தியாவின் சார்பில் போட்டிக்குத் தேர்ந்து எடுக்கப்பட்டு இருக்கிறது. ஒன்றரை மணி நேரப் படம். ஒரு சணல் மில் சொந்தக்காரர்-தொழிலாளர் தலைவர். இவர் அநியாயமாகத் தூக்கிலிடப்படுவது. அவரது கண்களை முதலாளி தானமாகப் பெற முயன்று தோல்வியுற்றுப் பிறகு அவைகளைக் கடத்திக்கொள்ள முயல்வது — இதுதான் கதை. ஓம்பூரி நடித்த இந்தப் படத்தை மேற்கு வங்க அரசு தயாரித்துள்ளது. 'சோக்' என்றால் 'அபின்' என்று பொருள். பட டைரக்டர் ஒரு பள்ளி ஆசிரியராம்.

ஒன்பது பேர் கொண்ட ஜூரிகள். வைஜயந்தி மாலா இடம் பெற்றிருக்கிறார். மற்றொருவர் அடூர் கோபாலகிருஷ்ணன். மூன்றே படம் டைரக்ட் செய்துள்ளார். மூன்றும் அவார்டு பெற்றவை. சமீபத்திய படமான 'எலிப்பொறி' இங்கிலாந்து பிலிம் இன்ஸ்டிடியூட்டின் பரிசு பெற்றுள்ளது. (ரேக்கும் ஒரு தரம் பரிசு கிடைத்துள்ளது.)

இதற்கு முந்தைய விழாக்களில் ரேயின் படங்கள் தொடர்ச்சியாகக் காட்டினார்கள். சென்றதடவை மிருணாள்சென்னின் படங்கள் பல இடம் பெற்றன. இந்தத் தடவை நம் பாலசந்தர் படங்களைப் போட்டிருக்கலாம். நிச்சயமாக இவரது படங்களுக்கு இந்தத் தகுதி உண்டு. ஆனால்... சரி... போகட்டும்.

தமிழ்ப் படம் ஏழாவது மனிதன் இடம் பெற்றிருக்கிறது.

முதல் நாள் பத்திரிகையாளர் காட்சியில் 'ஆறாவது சர்வதேசப் பட விழா' என்று காட்டினார்கள். 'இது ஒன்பதாவது விழா' என்று தெரிந்தும் எப்படி ஆறாவது விழாவின் போது தயாரித்த படத்தைப் போட்டுக் காட்சியைத் துவக்கினார்கள்?

துவக்க விழா 2500 பேர் உட்காரக்கூடிய ஏஷியாட் அரங்கில் நடைபெற்றது. திரையுலகப் புள்ளிகள் அதிகம் வரவில்லை. அம்பிகா ஜோஹர் போன்ற நட்சத்திரங்கள்(!) வழக்கமாக வருவார்கள். அவர்களைக்கூடக் காணவில்லை.

ரேகாவும் சஷிகபூரும் தோள் இடித்தபடி உட்கார்ந்திருந்தார்கள். அவர்களைச் சுற்றி 50 புகைப்படக்காரர்கள், 500 விசிறிகள். ஒரே கசமுசாதான் அரங்கில். சுனில்தத், அமோல்பலேகர், குல்ஜார் ஆகியோர் வந்திருந்தனர். ஏஷியாட் நட்சத்திரம் அமிதாப் பச்சனைக் காணவில்லை.





ஜூரிகளில் ஒருவரான லிங்கோ பிரோகா (பிலிப்பைன்ஸ்) ஏழு முழு நீள திரைப்படங்களை டைரக்ட் செய்தவர். இப்போது திரைப்பட வளர்ச்சிக்கான படங்களை டைரக்ட் செய்யத் தீர்மானித்து, பொழுது போக்கு படங்களை டைரக்ட் செய்வதை நிறுத்தி விட்டாராம். இவரது படமான ''மணிலா'' கடந்த பத்தாண்டுகளில் வந்த படங்களில் முதன்மையானதுஎன்ற கௌரவத்தைப்பெற்றிருக்கிறது.

ஜூரி சேர்மன் லிண்ட்ஸே ஆண்டர்சன் (இங்கிலாந்து). திரைப்பட விழா இயக்குனர் எம்.வி. கிருஷ்ணசுவாமி பிறந்த பெங்களூரில் தான் பிறந்தவராம். கியூபா டைரக்டர் தோமல் அலியாவும் கிருஷ்ணசாமியும் இத்தாலியில் ஒன்றாகப் படித்தவர்கள்.

'ரிமெம்பரன்ஸ்' (இங்கிலாந்து) படம் இங்கிலீஷில் இருந்தாலும் வசனமே புரியவில்லை. ஏகப்பட்ட கதா பாத்திரங்கள். (இந்த இங்கிலீஷ் படத்துக்கும் சப் டைட்டில் போட்டிருக்கலாம்.) அதே சமயம் மொராக்கோ படம் ''அமோக்'' முழுக்க முழுக்க இங்கிலீஷ் வசனத்துடன் இருந்தது. வசனமும் தெளிவாக இருந்தது. ஜோஹன்னஸ் பர்க் (தென் ஆப்பிரிக்கா) காட்சிகள் கண்ணுக்கு இதமாக இருந்தாலும் நிற வெறியின் பயங்கரத்தைக் காட்டும் காட்சிகள் முதுகெலும்பைச் சிலிர்ட்டன!

செக்கோஸ்லவாகியபடம் 'ரொமே[illegible]' பார்த்ததும் படத்தின் கதையோ நடிப்போ மனத்தில் நிற்காவிட்டாலும் ஒரு பயம் நம்மைச் சூழ்ந்து கொள்வது போல் தோன்றியது. போலீஸ் ராணுவம் ஆகியவை எப்படித் தனிமனிதனின் சுதந்திரத்தை அமுக்கும் என்று காட்டியிருந்தார்கள். அதெல்லாம் சரி. இந்த மாதிரி சினிமாவுக்கு மக்களிடம் என்ன வரவேற்பு இருக்கும்? ஒசியில் பார்ப்பவர்களுக்கே பல சமயம் போர் அடிக்கிறது.

விழாவில் இடம்பெறும் பல படங்களின் கதைச் சுருக்கத்தைப் படிக்கும்போது விழாவில் பிரமாதமான படம் எதுவும் இருக்கும் என்று தோன்றவில்லை. (க்ரேஸி பாய்ஸ் படம் கூட இடம் பெற்றிருக்கிறது.) இருந்தாலும் நம்பிக்கை இழக்காமல் அடுத்த 15 நாட்கள் படங்களைப் பார்க்க வேண்டும்.

-பி. எஸ். ஆர்







இருந்த காட்சியை அவர் விளக்கிச் சொல்ல நான் கேட்டிருக்கிறேன். அது போன்ற காட்சியை இங்கு நான் பார்க்கிறேன். ஒருபுறம் ராஜா, மந்திரி – இன்னொரு பக்கம் 'வேத விற்பன்னர்கள்!'' (கூட்டத்தில் சிரிப்பு அலையாக எழுந்தது. உள்ளே இளைய ராஜாவும், அமைச்சர் வீரப்பனும் இருந்தார்கள்!)

மெட்ராஸ் சிமெண்ட்ஸின் சேர்மன் திரு நினைதயாளு குறிப்பிட்டார்: ''விஞ்ஞானிகள் மனிதனை ஓர் அணுக்குவியலாகப் பார்க்கிறார்கள். அரசியல்வாதிகள் பகடைக்காயாகப் பயன்படுத்துகிறார்கள். சமயம் ஒன்றுதான் மனிதனை மனிதனாக, உடல், மனம், ஆன்மா எல்லாம் கொண்ட மானுடப் பிறவியாக ஏற்கிறது.''

திருச்சி எம். எல். ஏ. சௌந்தரராசன்: ''மனிதனுக்கும் யானைக்கும் மதம் பிடிக்கும். யானைக்கு மதம் பிடித்தால் கட்டுப்படுத்திவிடலாம். மனிதனுக்கு மதம் பிடித்தால் யாராலும் கட்டுப்படுத்த முடியாது. ஒவ்வொரு மனிதனும் மதம் பிடித்து அலையாதிருப்பதற்காகவே அவரவர் மதத்தோடு ஈடுபாடு கொள்ள வேண்டும்.''

இரண்டாம் நாளன்று ம. பொ. சி.: ''தமக்குப்பிறகு ஒருதகுதியான தலைவரைப் பீடத்தில் அமர்த்திவிட்ட பிறகுபெரியவர்கள்

# துறவியின் பவழ விழா

**''எ**தற்கு வேண்டுமானாலும் உபமானம் சொல்லலாம். முகத்துக்கு... சந்திரனுக்கு இப்படி எதற்கு வேண்டுமானாலும் உபமானம் சொல்லிக் கொண்டே போகலாம், ஆனால் குருவுக்கு மாத்திரம் உபமானம் சொல்லவே முடியாது. அது போல ஈடுஇணையில்லாப் பெரியவர் நமது ஸ்வாமிகள்.''

காஞ்சிப் பெரியவரின் பவழ விழா சென்னையில் கொண்டாடப்படும்போது இறுதி நாளன்று பேசிய ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் அமுத வாக்கிலிருந்து ஒரு சிறு பகுதிதான் மேலே கூறியது. அவர் தொடர்ந்தார்:

''ஒருதரம் பாண்டிச்சேரியில் ஆதி சங்கரர் விழா நடந்த சிறப்பைப் பற்றிப் பெரியவர்கள் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள். ஒரு பக்கம் பிரெஞ்சு நாட்டு அறிஞர்களும், இன்னொருபுறம் வேத சிரோன்மணிகளும் பந்தங்களை முற்ற முழுக்கத் துறந்து தமது பற்றற்ற நிலையைக் காட்டியதை, ஆன்மிகத்தில் பார்க்க முடிந்தது. அரசியலில் எங்களுக்கெல்லாம் எங்கே முடியப்போகிறது? நாங்களும்தான் முயன்று பார்க்கிறோம். முடிவதில்லையே!'' என்று பலத்த சிரிப்புக்கிடையே கூறினார்.

முன்னாள் தலைமை நீதிபதி இஸ்மாயில் அவர்களின் அனுபவம் எப்படி?

'' 'காஞ்சிப் பெரியவரின் விழாவில் ஒரு முஸ்லிம் வந்து பேசுவதாவது' என்று யாரும் ஆச்சரியப்பட வேண்டாம்!'' என்று முன் கூட்டியே அறிவிப்பு செய்தார். ''நான் காஞ்சி முனிவரை நேரில் தரிசித்து உரையாடியிருக்கிறேன். அவருடைய காந்த சக்தி நிறைந்தகண்களின் நீட்சண்யத்தை நினைத்து வியந்ததுண்டு! கவியரங்கத்தில் பாட கவிஞர் மரியதாஸை அழைத்து வரச் சொன்னதும் நான்தான்'' என்றார்.



மோகன சுந்தரம்



ஜெகோட்னரு



சித்ரா

இஸ்லாமியர் குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சி: ஒரு ரஷ்யர் பெரியவரைப்பார்க்க வந்தார். ''மனத்திலும் செயலிலும் தூயவரான ஒரு மனிதன் கோயிலுக்கே ஒரு நாளும் சென்றதில்லை. அவனுக்கு நீங்கள் குறிப்பிடும் மோட்சம் கிடைக்குமா?'' என்று கேட்டார். பெரியவர் சில விநாடி மௌனத்துக்குப் பிறகு ''நிச்சயம் கிடைக்கும்'' என்றார். ரஷ்யர், ''ஆஹா, உங்கள் பதில் எனக்கு வெகு திருப்தியாக இருக்கிறது – வெகு திருப்தி – வெகு திருப்தி'' என்று மகிழ்ச்சி மேலிடச் சொன்னார்.

திரு முக்தா சீனுவாசன் பேச்சிலிருந்து வாசகர் பாபு ஒரு பகுதியை எழுதுகிறார்:

''45 வருடம் முன்னால் தஞ்சையில் உள்ள உத்தமதானபுரம் கிராமத்தில் திரு உ. வே. சா. அவர்களைக் காணப் பெரியவர்கள் வருகை புரிந்தார். எனக்கு அப்போது ஏழு வயது. 1008 ஸ்ரீராம ஜெயம் எழுதி அவரிடம் கொடுத்தால் வெள்ளிக் காசு தருவார்கள் என்று சிலர் கூறியதைக் கேட்டு நானும் ஐந்தாறு சிறுவர்களும் எழுதிக் கொண்டு உ. வே. சா. மைத்துனர் திரு நரசிம்மனிடம் கொடுத்தோம். அவர்தான் வெள்ளிக்காசு தருவார்கள். நாங்கள் கொடுத்த நோட்டுப் புத்தகங்களை ஒவ்வொன்றாகச் சரி பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது, ஸ்நானம் செய்வதற்காகப் பெரியவர் வந்த போது நரசிம்மனைப் பார்த்து ''என்ன பார்க்கிறாய்? ஒரு பையன் மட்டும் குறைச்சலாக எழுதியிருக்கான். அவனுக்கும் சேர்த்து வெள்ளிக் காசு கொடு. இல்லே யென்று சொல்லாதே!'' என்றார். எங்களுக்கு ஆச்சரியம். பெரியவர் நோட்டுக்களைப் பார்க்கக் கூட இல்லை. உண்மையிலேயே 1008 என்று சொல்லிச் சற்றுக்குறைவாக எழுதிக் கொடுத்தது நரசிம்மனின் பேரன்தான்!''

மாணவர்களுக்கென்று ஒரு பேச்சுப் போட்டி நடத்தியதைக் குறிப்பிட்டாகவேண்டும். பொருள்: அத்வைத வேதாந்தம்! முதல் பரிசு பெற்ற திரு மோகனசுந்தரம் ''மாயை'' பற்றி ஏழு நிமிடம் உரையாற்றினார். பாமரர் களைக் கவரும்படி இவர் பேச்சு அமைந்தது. கவிதையில் அடியொற்றி முன்னேற விரும்பும் இவர் தற்சமயம் அவ்வை நடராசனிடம் பயிற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார்.

இரண்டாம் பரிசு பெற்ற குமாரி சித்ரா, மோகனசுந்தரத்துக்கு உறவு முறையாம். (குடும்பத்திலேயே வேதாந்தம் ஊறியிருக்கிறது போலும்.) மூன்றாம் பரிசு வாங்கின குமாரி ஜ்யோட்ஸ்னா, வேதாந்தத்தில் பி. எச்டி படிக்கிறார். பிரெஞ்சு வேதாந்தி ஸார்ட்ரேயையும் ஸ்ரீ சங்கரரையும் ஒப்பிட்டு ஆராய்ச்சி நடத்துகிறார்!

மாணவர்களிலிருந்து பல துறைகளைச் சேர்ந்த பிரமுகர்கள் வரை எல்லாரையும் பங்கு ஏற்கச் செய்து பவழ விழா சிறக்க மூலகாரணமாயிருந்தவர் ''குருகைங்கர்ய மணி'' என்ற விருது பெற்ற இந்து தர்ம மன்ற செயலர் திரு மீனாட்சி சுந்தரம்.

**தொகுப்பு : சாருகேசி, தமயந்தி**

(இவ்வாண்டு பொங்கல் திருநாள் சென்னை வாசிகளுக்கு ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் விஜயம் காரணமாக இரட்டிப்பு மகிழ்ச்சியுடையதாகிறது. மேல் அட்டையில் காஞ்சி காமகோடி பீடாதிபதியை வண்ணப்படமாக அளிப்பவர்: **பிரபாகர்**)

ஸர்ஜரி நம்முடைய வைத்திய முறையில் இல்லை என்று நாம் நம்பும்படியாகி விருப்பது தப்பு. வாஸ்தவத்தில் நம்மிடம்தான் ஆதியிலேயே ஆயுர்வேத சாஸ்திரம் ஏற்பட்ட புராதன காலம் தொட்டே 'ஸர்ஜரி' என்பதான சஸ்திரசிகிச்சை இருந்திருக்கிறது. ஆயுர்வேதத்துக்கு இரண்டு பெரியவர்கள் மூலபுருஷர்கள். ஒருத்தர் சரகர் இன்




னொருவர் ஸுச்ருதர். இவர்கள் எழுதிய ஸம்ஹிதைகள்தான் ஆயுர்வேதத்துக்கு மூல கிரந்தங்களாக இருப்பவை. சரக ரிஷி என்பது பதஞ்சலியே எனத் தெரிகிறது. அக்னிவேச்ய ரிஷி எழுதியதைச் சரகர் விஸ்தாரம் செய்திருக்கிறார். வாக்படர் எழுதிய 'அஷ்டாங்க ஹ்ருதய'மும் ஆயுர்வேதத்துக்கு ஒரு அதாரிடி. தமிழ் பாஷையிலும் அநேக ப்ராசீன நூல்கள் ஸம்பிரதாயமாக வந்திருக்கின்றன. சரகர், ஸுச்ருதர் என்ற இருவரில் சரகர் மருந்து கொடுத்துக் குணப்படுத்துவது பற்றிச் சொல்கிறார். ஸுச்ருதர் சஸ்திர சிகிச்சை செய்து குணப்படுத்துவது பற்றிச் சொல்கிறார்.

ஆயுர்வேதத்தை நாம் ஜாக்ரதையாக பூர்ண ரூபத்தில் காப்பாற்றி வந்திருந்தால் ஆயுர்வேத வைத்தியர்கள் மருந்து கொடுப்பதில் மட்டுமின்றி சஸ்திர சிகிச்சை செய்வதிலும் திறமை படைத்தவர்களாயிருந்திருப்பார்கள். ஆனால் சரக ஸம்ஹிதை பிரசாரத்தில் வந்திருக்கிற மாதிரி ஸுச்ருதருடைய 'ஸர்ஜரி' நூல் வராமல் நஷ்டமடைந்திருக்கிறோம்.

–ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசார்ய ஸ்வாமிகள்

# முள் இல்லாத ரோஜா





சப்பாணி
செம்பட்டை.
அடுத்த வாரிசு?
'முள் இல்லாத ரோஜா' நாயகன்
ஊமையன்.
சக்கரவர்த்தி ஏற்கிறார் வேடத்தை.
நாலு முழத் துண்டு
நாக்கைக் கடித்துக்கொள்ளும் நயம்
வெகுளித்தனமான கோணல் முகம்
ஊமைச் சக்கரவர்த்தி
என்று ஜொலிக்க முடியாவிடினும்
அடித்துவிடுகிறார் பாஸ் மார்க்!
ஆனால்....
'இன்னொரு சப்பாணி'தானே என்று
ஏளனப்படுத்த இடம் இருக்கிறதே!
மலையாள 'தகரா' பிரதாப்
நினைவுக்கு வரவில்லையென்றால்
பூரித்துப் போயிருப்போமே.

• • •

அழகு – அது அவள் பெயர்.
அப்படியொன்றும் அழகில்லை.
அக்கிராமத்தில் நாலுபேர் – அவளை
அடைய ஆசைப்படுகிறார்கள்.
நாலும் நாலு கோணம்.
டெல்லி கணேஷ் – அனுதாபம்
ராஜ்கிருஷ்ணா – காதல்
கவுண்டமணி – காமம்
குமரி முத்து – திருட்டுத்தனமான மனைவி
நாலுபேருக்கும் டிமிக்கி.
ஊமையன் மாட்டிக் கொள்கிறான்.
'அழகு' விஜயகலாவுக்கு
முதல் படம் என்பதால்
'தேவலாம்' போடலாம்.

• • •

டெல்லி கணேஷ் நடிப்பில்
நிறைய உண்டு கண்ணியம்.

• • •

உஷா ராஜேந்தர்
காலை ஊன்றி ஊன்றி நடக்கிறார்
மனத்தில் ஊன்றவில்லையே!

• • •

விரதம் இருந்து விரதம் இருந்து
கணவனுக்கு விரகதாபம் எழுப்புகிறார்
தன்சை லதா!
என்ன விரதமோ? என்ன தாபமோ?

• • •

இசைக்குப் புதியவர்
முரளிராஜ்
இனிய இசையில்
நான்கு பாடல்கள்
ஓகே!

• • •

டைரக்டர் பெயர்
கே. ராமராஜ்
வாடிப்போன ரோஜாவைத்
தலையில் சூட்ட முயன்றால்
யார்தான் ஏற்பார்கள்?

– திரைஞானி

# ஒரு சங்கமத்தைத் தேடி ...



**வாஸந்தி**

எழுதும்

புதிய
தொடர்
கதை

**கல்கி**

30-1-83
இதழில்
ஆரம்பம்



கல்கி



1983 ஜனவரி 16
துந்துபி தை 3
மலர் : 41 இதழ் : 25

# இந்திரா அலை ஓய்ந்துபோனதா?

பாமர மக்கள் என்று கருதப்படுவோர் அப்படியொன்றும் அப்பாவிகள் அல்ல என்று மீண்டும் ஒருமுறை நிரூபணமாகியுள்ளது. 'எமக்கு ஜனநாயகம் பற்றிய நுணுக்கங்கள் தெரியாதிருக்கலாம்; அரசியல் குறித்து ஏட்டறிவு இல்லாது போகலாம். ஆனால் பொது அறிவு நிரம்பப் பெற்றவர்கள்தாம் நாங்கள்' என்று எடுத்துக் காட்டிய ஆந்திர, கர்நாடக, திரிபுரா மக்களை வாழ்த்துகிறோம்.

திரிபுராவில் இடது கம்யூனிஸ்ட் கூட்டணி பெற்றுள்ள வெற்றி அதன் ஆட்சியில் மக்கள் அடைந்துள்ள திருப்தியையும் வைத்துள்ள நம்பிக்கையையும் பிரதிபலிக்கிறது. ஆனால் கர்நாடகத்திலும் ஆந்திராவிலும் மக்கள், ஆட்சியிலிருந்தோரைப் பதவி இறக்கம் செய்து மாற்றுக் கட்சியினருக்கு வாய்ப்பளித்துள்ளனர். ஆகக்கூடி மூன்று மாநிலங்களிலும் இ. காங்கிரஸுக்குப் படுதோல்வி!

இதனை இந்திரா காந்தியின் தோல்வி என்று கருதத் தேவையில்லை. அவருக்கு மக்களிடம் செல்வாக்குக் குறைந்துவிட்டது என்பதாகக் கணிப்பது சரியாகாது. ஆந்திரா, கர்நாடகா வோட்டு இந்திராவுக்கு எதிரான வோட்டுமல்ல; ராமராவ், பங்காரப்பா, பொம்மை ஆகியோருக்கு ஆதரவான வோட்டுமல்ல. தங்களை மாநில அளவில் இதுவரை ஆண்டு வந்தவர்களுக்கு எதிரான வோட்டு. கர்நாடகத்திலும் சரி ஆந்திராவிலும் சரி உட்பூசல்களும் லஞ்ச லாவண்யங்களும் மலிந்திருந்தன. ஆந்திராவில் அடுத்தடுத்து நாலு முதல்வர்கள் நியமனமாக உட்பூசல் காரணமாயிற்று. ஊழல் குற்றச்சாட்டுக்களுக்கோ இரு மாநிலங்களிலும் கணக்கு வழக்கே இல்லை. திறமையான ஆட்சியுமில்லை, நல்லாட்சியும் நிலவவில்லை. எனவே தான் எதிர்த் தரப்பினருக்கு வாய்ப்பளிக்க மக்கள் தீர்மானித்துள்ளனர்.

இப்படிச் சொல்லும்போது இன்று ஆட்சி அமைக்கும் வாய்ப்புப் பெற்றுள்ள தலைவர்களை நாம் குறைத்து மதிப்பிடுவதாகக் கருத வேண்டியதில்லை. ஆனால் அதே நேரத்தில், இ. காங்கிரஸ் ஆட்சி சுத்தமானதாகவும் ஜனநாயக மரபு காப்பதாகவும் இருந்திருந்தால் என்.டி. ராமராவ் அரசியலிலேயே புகுந்திருக்கப் போவதில்லை என்பதையும், ஜனதா, கிராந்தி ரங்கா, பாரதீய ஜனதா ஆகியன இவ்வளவு எளிதாக வெற்றிகளைச் சந்தித்திருக்க முடியாது என்பதையும் மறப்பதற்கில்லை.

இந்தத் தேர்தல் முடிவுகளிலிருந்து இ. காங்கிரஸ் பாடம் கற்றுக் கொள்ளப் போகிறதா இல்லையா என்பதுதான் பிரச்னை. படிப்பினை பெற்று, உட்கட்சி ஜனநாயகம் வளர ஆவன செய்தால், நேர்மையாளர்களையும் திறமையாளர்களையும் இளைஞர்களையும் ஊக்குவித்துக் கட்சியைத் தூய்மைப்படுத்தினால் இ. காங்கிரஸையும் அதன் தலைவரையும் மீண்டும் ஆதரிக்க இதே மக்கள் தயங்க மாட்டார்கள்.

இ. காங்கிரஸ் நடத்த வேண்டிய ஆத்ம பரிசோதனை அதற்கு மட்டுமின்றி இன்று புதிதாக ஆட்சிக்கு வந்துள்ளவர்களுக்கும் நற்பலன் தரும். இ. காங்கிரஸின் தவறுகளை இவர்களும் செய்யாமல் தவிர்க்க வேண்டுமல்லவா? ஆட்சியில் அமர்வோரிடம் நேர்மையையும் ஜனநாயகப் பண்புகளையும் ஒற்றுமையையும் திறமையையும் இந்த வரிசையிலே மக்கள் எதிர்பார்க்கிறார்கள். இனியேனும் ஆந்திர, கர்நாடக மக்களுக்கு இவை கிடைக்கட்டும்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



# உன்னதத் தரத்திற்கும் உயர்ந்த அளவு உற்பத்திக்கும் நடைபெறும் போட்டியில் தரமே எப்பொழுதும் வெற்றி பெறுகிறது

# **கொனார்க் டிவி**யின் தரம்

தரம் எப்படியும் போகட்டும். அதிக எண்ணிக்கை செட்டுகளைத் தயாரித்துக் குவிப்போம் என்ற எண்ணம் எங்களுக்கு இல்லை. எங்களால் தரமான செட்டுகள் எத்தனை தயாரிக்க முடியுமோ அத்தனை செட்டுகளே தயாரிக்கிறோம்.

கடைக்குப் போனோம். உடனடியாக ஒரு டிவி வாங்கினோம். வீடு திரும்பினோம் என்று இருக்கும் இன்றைய நிலைமையில். மக்கள் கொனார்க் டிவிக்காகக் காத்திருந்து வாங்குவது எங்களது உயர்ந்த தரத்திற்காகத்தான்.

# 25

“என்ன பேசாம வரீங்க?'' என்றாள் கிரிஜா.

''எத்தினி நான் இன்னும் வெளி நாட்டில இருந்தா உன் நகைகளுக்கு உண்டான காசை மீட்கலாம்னு பொட்டைக் கணக்குப் போட்டுக்கிட்டு இருக்கேன்.''

''சம்பாதிச்சப்புறம் நீங்க ஒரு நாத் தங்க வேண்டாம். வந்துடுங்க.''

சதாசிவம் எதிர்ப்பட்டான். இரண்டு பேரையும் மாறி மாறிப் பார்த்தான். ''என்ன எல்லாம் செரியாயிடுச்சில்லே. பெண் டாட்டி கிடைச்சாச்சில்லே? அப்பாடா! இப்பத்தாம்மா உன் புருசன் சிரிச்ச முகத் தைப் பார்க்கறேன்.''

''நான் அவருக்கு நிறையக் கவலே கொடுத் துட்டங்க.''

''ஞாபகம் எல்லாம் வந்திருச்சா?—நான் யாரு?''

''சதாசிவம்.''

''என்ன சதாசிவம் எல்லாம் செட்டில் ஆயிருச்சா?''

''அங்கங்க ஒருவழியா ஆயிருச்சு. மந்திரி ஒரு மாதிரி தீர்த்து வெச்சிருக்காரு. உப தேர்தல் வருதில்லே?''

''எப்படித்தான் அவ்வளவு தூரம் அடிச் சுக்கிட்டு இருந்தவங்க சட்டுனு எல்லாம் ஒஞ்சு போயி கை குலுக்கிட்டு போட்டோ எடுத்துக்கிறீங்களோ?''

''பைசா!'' 'டிங் டிங்' என்று விரல் களைச் சுண்டினான் சதாசிவம்.

''பைசாவுக்கு சிவம் கிடையாது. சிங்கத்தலேக்கு ஏசு கிடையாது. சுன் னத்து கிடையாது. புள்ளி விவரம் எல்லாம் ஒழுங்கா வெச்சிருக்கன். கிறிஸ்டியன்ஸ் மொத்தம்நம்மநாட்ல ஒண்ணரைக் கோடி. தமிழ் நாட் டில் இருபத்தி நாலு லச்சம். பெரும் பாலும் தென் மாநிலங் களில...''

''அதெல்லாம் கிடக்கட்டும். ...லை கம் என்னஆச்சு?''

''தின்னுபோச்சு.''

''எதனால?''

''நபாரு கனகு! கந்தசாமி ஆ... மொய்தீன் ஆயிர்ருன்னு ...துக்கு என்ன காரணம்? பணம்! ...ல்வா புதுசு. தாடி புதுசு ...மா புதுசு. ஆறு நோட்டு... பழ சில்லே? பணம் கொ...த்துக் கலகம் பண்ணின... பண... கொடுத்து ...க்க முடியாதா?''

''பணம் யாருக்கு?''

''நம்ம எல்லாருக்கும்தான்! இந்தக் கட் சிக்குக் கொஞ்சம் அந்தக் கட்சிக்குக் கொஞ் சம். இப்ப உண்ணிப் பய இறந்து போயிட் டான் இல்லே? அவனுக்குக் கூட ஐயாயிரம் ரூவா வாங்கியிருக்கேன். அந்தப் பொண்ணு ஊருக்குப் போயிருச்சாம்.....''

''நான் போய்ச் சந்திக்கலாம்னு இருக் கேன்'' என்று மனைவியைப் பார்த்தான். கிரிஜா கவனிக்கவில்லே.

''போறப்ப சொல்லு. ஒரு ஐநூறு ரூவா கொடுக்கறேன்.''

''ஐயாயிரம்னு சொன்னீங்க!''

''ஐயாயிரம்னு ஐயாயிரத்தையும் கொடுத் துர்றதா? இப்ப அவங்க மட்டும் என்ன செய்யறாங்க? எல்லாம் மீன்காரங்க குடும்பத் துக்கா போகப் போவுது? பாக்கி சர்ச்சுக் கும் ஒண்ணு ரண்டு குண்டங்களுக்கும்தான் போகப்போவுது. இதப்பாரு. நடந்ததைக் கரெக்டா சொல்லிரவா? மாசிக் கொடை திருநா இந்த வருசம் எப்படி நடக்குது பாத் துரலாம்னு மீன்காரப் பொம்பளிங்க ஒரு மாதம் முந்தியே பேசிக்கிட்டாங்களா இல் லேயா? என்ன அர்த்தம்? கலகத்துக்கு ப்ளான் போட்டு வெச்சிருக்காங்கன்னுதானே? மீன் காரங்க வன்முறை செய்தது எல்லாருக்கும் தெரியும். எஸ். ஐயத் தாக்கியதா ருசு வாயிருச்சு. இருவத்தி அஞ்சு போலீஸ்



காரங்களை மூவாயிரம் பேர் தாக்கினாச் சுடாம என்ன பண்ணுவாங்க? சுட்டதில ஆறு பேர் செத்துட்டாங்க. அதில ஆரம்பிச்சது வம்பு!

''லவுட்ஸ்பீக்கர்லே ஆரம்பிச்சது பிரச்னை, குருசாடில ஸ்பீக்கர் வெச்சம்னு பாதிரி சொல்லுதான்....''

''எத்தனை பேரு இறந்திருப்பாங்க?''

''அதிருக்கும் நாத்துக் கணக்கில!''

''லவுட்ஸ்பீக்கர்! — கடைசில எப்படிச் சமாதானமாயிட்டிங்க?''

'''சமாதானமாவது! இப்போதைக்குச் சண்டை இல்லை. மருதியும், சர்ச்சும், கோயிலும் இருக்கிறவரைக்கும் சண்டை வந்துக்கிட்டுத்தான் இருக்கும். நேத்தைக்கு ஸ்பீக்கர்.... நாளைக்கு என்னவோ! இப்போதைக்கு சண்டை இல்லை. தேர்தல் முடியறவரைக்குமாவது சண்டை வராது. அதுக்குத் தக்க பணம் கொடுத்து வச்சிருக்காங்க...''

தன் மடியிலிருந்து புதுசா ஐந்து நூறு ரூபாய்த் தாள்களை எடுத்து ''உண்ணிக்கு!'' என்றான். ''பாதிரியார் சாப்பிடக் கூப்பிட்டிருக்காரு. பொது விருந்து. வரயா?''

''இல்லை. நீங்க போயிட்டு வாங்க.''

ரத்தினசாமி ஓடிவந்து ''அண்ணே! நம்ம போட்டோ எல்லாம் பேப்பர்ல பெரிசா வந்திருக்கு'' என்று பதறினான்.

''அட! அதுக்குள்ள வந்திருச்சா?... கொண்டா!'' என்று அதை ஆவலுடன் பிடுங்கிக்கொள்ள முன் பக்கத்தில் சமாதான ஒப்பந்தத்தில் எல்லோரும் மந்திரியுடன் சிரித்துக்கொண்டிருந்தார்கள்.

''கனகு, உங்க ரெண்டு பேர் போட்டோ கூட வந்திருக்கு...''

கனகசபை மெலிய ஆர்வத்துடன் அதை வாங்கிப் பார்த்தான். அவனும் கிரிஜாவும் உட்கார்ந்திருப்பதைப் போட்டிருந்தது.

'மனைவி கிடைக்கப்பெற்ற கனகசபை!'

கலகத்தை அடக்கியதில் அமைச்சரின் பணி கணிசமானது. மணற்காடு கிராமத்தில் இனி ஆக்கபூர்வமான செயல்களே நிகழும் என்று நம்புவதாக அமைச்சர் கூறினார். இரு தரப்பினருடனும் அயராமல் பேச்சு வார்த்தை நிகழ்த்தி அவர்களின் குறைபாடுகளைக் கேட்டறிந்து கலகத்தில் பாதிக்கப்பட்டவர் இல்லங்களுக்குச் சென்று...

''இவன் திருநவேலில தண்ணி அடிச்சுட்டு இருந்தான்... அவன் பேப்பரே இது! பதவி போவப் போவதுன்னு சொல்லிக்கிட்டிருந்தாங்க. இப்ப ஸ்திரப்படுத்திக்கிட்டான்.''



''பத்து லட்சமாவது விட்டிருக்க மாட்டாங்க?''

''எல்லாம் பஸ் ஆப்பரேட்டருங்க பணம். பாதிக்கு மேலே கட்சிக்குப் போயிருக்கும்... நாங்கூட ஒரு ரூட்டு கேட்டிருக்கேன்...டே! நம்ம கிராமத்திலே இனி சண்டை வேண்டாம். ஆக்கபூர்வமா ஏதாவது செய்யலாம்...என்ன கிரிஜாபேசாமயே இருக்கே?''

''வாங்க. வீட்டுக்குப் போகலாம். அம்மா காத்திருக்கும்!''

அம்மா வீட்டைக் கூடியமட்டும் ஒழுங்கு படுத்தி வைத்திருந்தாள். இருக்கிற பாத்திரத்தில் குழம்பு கொதித்துக் கொண்டிருந்தது. ''நீங்க ஊருக்குப் போறவரைக்கும் கிரிஜா இங்க இருக்கட்டுங்க. அப்புறம் நாகர் கோயில் அழைச்சுக்கிட்டுப் போயிர்றங்க.''

''சரி.'' அவன் மனத்தில் வளப்பாடு கிராமத்துக்குப் பஸ் விசாரித்துக்கொண்டிருந்தான். பைக்குள் தேவகியின் மலையாளக் கிறுக்கல் செல்லமாக உறுத்தியது. என்ன அர்த்தம்? தன்னுடன் வர விரும்புகிறாள் என்றுதானே? மனசு மாறிவிட்டாள். முதலில் அவளைப் போய் அழைத்துக் கொண்டு வந்துவிடலாம். திருவனந்தபுரத்தில் ஓட்டல் ரூமில் இருக்கலாம். எங்கேயாவது ரிஜிஸ்தர் கல்யாணம் பண்ணிக் கொண்டு விடலாம். இரு தாரச் சட்டம் அனுமதிக்கவில்லை என்றால் மதம் மாறிக் கொள்ளலாம். தேவகியை அடைந்தாக வேண்டும். பாதை சிக்கலானது. அதற்காகத் தியாகங்கள் செய்துதான் ஆக வேண்டும். சிலர் மனங்களைப் புண்படுத்தித்தான் ஆக வேண்டும். மற்றவரை லேசாக மனத்திலோ உடம்பிலோ துன்புறுத்தாத சந்தோஷமே இல்லை. துன்பம் தராத சுத்தமான சந்தோஷம்என்பதுசொர்க்கத்தில்தான் இருக்க முடியும். கிரிஜாவை நோக்கி அவள் குறைகளையெல்லாம் பட்டியலாக யோசித்

சிகரெட் பிடித்த அனுபவம் பற்றி பட்டோடி:

''அது ஒரு வேதனையான அனுபவம். பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். வயது 16. மற்ற மாணவர்கள் சிகரெட் பிடிப்பதைப் பார்த்ததும் எனக்கும் ஆசை வந்தது. நானும் பிடித்தேன். இப்போது சிகரெட்டை வெறுத்தாலும் என்னால் விட முடியவில்லை. என் கான்ஸன்ட்ரேஷனை இது கெடுக்கிறது. எல்லாருமே — குறிப்பாக விளையாட்டு வீரர்கள் — சிகரெட் பிடிக்கும் பழக்கத்தை விட்டொழிப்பது நல்லது.'' மிரரிலிருந்து சௌம்யா



தான். இவளுக்கு நகைதான் முக்கியம். நான் முக்கியமல்ல. அதற்குத் தண்டனையாகத்தான் கணவனை இழக்கப் போகிறாள். வளப்பாடு எங்கே இருந்தாலும் அங்கே போய்த் தேவகியைச் சமாதானப்படுத்தி, அப்பனுக்குப் பணம் ஏற்பாடு பண்ணி, எல்லோருக்கும்சந்தோஷ சவரன்களைவாரி இறைத்து, தேவகி என்கிற தங்கப் பறவையைப்பிடித்துக் கொண்டு ஓடிவந்துவிட வேண்டும். இதோ!

''எங்க கிளம்பீட்டிங்க?'' என்றாள் கிரிஜா.

''வெளிய பக்கத்துல ஒரு கிராமத்துக்குப் போய் வரணும்.''

''எதுக்கு?''

''ஒரு சோலி!''

''என்ன சோலி? எங்கிட்டத்தான் சொல்லுங்களேன். நானும் வரவா?''

''வந்ததும் சொல்றேன் கிரிஜா. நீ வேண்டாம். ரெஸ்ட்டு எடுத்துக்க.''

''என்ன சோலின்னு சொல்லக்கூடாதா?''

''என்னடி அவரைப் போட்டுத் தொண தொணன்னுக்கிட்டு... நீங்க போய் வாங்க மாப்பிளே! சாப்பிட வந்துருவிங்க இல்லே?''

''ம்!''

ஒருமுறை இரண்டு பேரையும் ஆதங்கமாகப் பார்த்துவிட்டுப் போனான். ரோடு விளிம்புக்கு வந்தான். கேரளப் பகுதியை நோக்கிச் சென்ற பஸ்ஸில் விசாரித்து ஏறிக் கொண்டான். பஸ் ஆடி ஆடிச் செல்ல, கைவசம் இருந்த டிராவலர்ஸ் செக்குகளைக் கணக்கிட்டுக் கொண்டான். விரல் மோதிரமும் கழுத்துச் சங்கிலியுமே பத்துப் பவுன் பெறும். பணத்தைப் பற்றிக் கவலை இல்லை. மனத்தைப் பற்றித்தான். அவளைத் தனியாகச் சந்தித்து எப்படியோ அரை குறை மலையாளத்தில் பேசிப் புரியவைத்து...

''யாராண வளப்பாடு?''

கேரளத்தின் மாதிரி கிராமம் போல இருந்தது வளப்பாடு. பச்சை வாய்க்காலை விரும்பி முதுகை வளைத்து முத்தமிடும் தென்னை. மெல்ல நழுவும் சரக்குப் படகு. டீக்கடையில் ப்ரேம் நஸீரும் ஜெயபாரதியும்; நேஷனல் பானஸோனிக்கும் அரசியல் மனோரமாவும். குப்பல் குப்பல்களாகப் பச்சை இளநீர். 'வாரயம்' என்று சாராயத்தை எழுதியிருக்கும் மலையாளக் கள்ளுக்கடை.

''தேவகியோ? யாராண தேவகி?.... அச்சண்ட பேர் எந்தா?''

''அப்பா பேரு தெரியாது. உண்ணின்னு அவளுக்கு ஒரு தம்பி உண்டு. மணக்காட்டில் கலகத்தில இறந்து போயிட்டான்....''

''ஓ! ஆயாளோ'' அடையாளம் கிடைத்தது. வாய்க்கால் ஓரமாகப் 'போய்க்கோள்'ளும்படி வழி கிடைத்தது. பச்சை அடர்ந்து அவன் மேல் கவிக்கொள்ள ஒரு வீட்டின் முன் கூட்டமாக இருந்தது. அருகில் போய் விசாரித்ததில் அந்த வீடுதான் என்று தெரிந்தது. தேவகியின் அப்பாவை ஒரு முறை பார்த்திருக்கிறான். அவருக்கு உள்ளே தகவல் சொல்ல அவர் வெளிவந்து சற்று நேரம் திகைத்து அப்புறம் பரிச்சயம் தோன்ற ''வரின்! வரின்!'' என்றார்.

''தேவகியைப் பார்க்க வந்தேன். இருக்காளா?''

''அகத்து வரு!'' யாரோ ஒருவன் எல்லோரையும் கை கழுவச் சொல்வது போல் இருந்தது. ''இத்திரி சோறு உண்ணும்'' கனகசபையின் கரத்தில் ஒரு செம்பு தண்ணீர் கொடுக்கப்பட்டது. கைகழுவிக்கொள்ள, ஒரு நாய் அவனிடம் சிநேகம் பிடிக்கும் உத்தேசத்தில் வாலாட்டியது. ஜன்னலருகில் பெண்கள் குரல். உள்ளே சிலைச் சின்ன இலை போட்டுப் பலர் உட்கார ஆயத்தமாக..

''ராகுகாலம் தொடங்களுதின முனப்பு ஜாதகம் கொடுக்காம் அதா நல்லது!''

'ஜாதகமா?' என்று வியந்தான். எனக்காகக் காத்திருக்கிறார்கள்! இதற்காகத்தான் தேவகி என்னை அழைத்திருக்கிறாள்! இதில் என்ன வியப்பு....

''சரியானு. ஒரு விளக்கம் நிறையும் வேகம் இங்க எடுத்தாடே மணி ஒந்நரை ஆலான போனது!'' பெண்கள் தென்பட்டார்கள். இது என்ன சடங்கு என்று புரியவில்லை. சில பெண்கள் விளக்கும், நிறைநாழியும் எடுத்துக் கொண்டு வந்தார்கள்.

''எல்லாரும் அகத்தொட்டு வரும்'' தேவகியின் அப்பா கனகசபையைக் கையைப் பிடித்து இழுத்து உள்ளே செல்ல கனகசபை, ய.ரீ மாலை போட்டுராஜாவாகபோகிறவன் போல் உற்சாகமாக உணர்ந்தான். சட்டென்று அவன் வாழ்க்கைப் பிரச்னை அத்தனையும் அம்புலி மாமா கதையில் போலத் தீர்ந்து தெளிவாகி விட்டன. சாப்பிட்டுக்கொண்டிருந்தவர்களும் சட்டென்று எழுந்து உள்ளே வந்தார்கள். கனகசபையுடன் அருகில் இருந்தவர் மலையாளத்தில் வேகமாகப் பேச மையமாகத் தலையாட்டினான். அந்தப் பதில் அவருக்குப் போதும் போல இருந்தது. கூடத்தின் ஒரு மையத்தில் ஏற்றி வைத்த விளக்கும் நிறைநாழியும் இருந்தது.

''தா! கிழக்கொட்டு தெரிஞ்சு நில்க்கு?''

அந்த முகங்களை மெல்ல மெல்லப் பார்வையால் பெருக்கினான். இருட்டில் எதிர் அறையில் வாசலை அடைத்துக் கொண்டிருந்த பெண்களின் மத்தியில் தேவகி தெரிந்தாள். கண்களால் சிரித்து 'வந்துவிட்டேன் தேவகி! நீ ஆணையிட்டபடி வந்துவிட்டேன். தக்க சமயத்தில் வந்து விட்டேன்... வந்துவிட்டேன்!....'

''ஜாதகம் கொடுக்கட்டே, ஜாதகம் கொடுக்கட்டே, ஜாதகம் கொடுக்கட்டே?'' என்று கிழக்கு நோக்கி நின்றவர் கேட்கச் சின்னப் பிள்ளைகள் சிரித்தார்கள். அவனுக்கு எதிரே மற்றொருவர் வந்து நிற்க 'ரு ரு' என்று அதட்டினார்கள். சுற்றிலும் இருந்தவர்களிடம் சடசடவென்று மலையாளத்தில் கேட்பது கனகசபைக்குப் புரிந்தது.'யாருக்காவது சம்மதம் இல்லையென்றால் சொல்லவும். ஜாதகம் கொடுத்து விட்டால் அந்தப் பெண்ணை யாருக்கும் கொடுக்க முடியாது. கல்யாணம் ஆனமாதிரிதான்!'

சுற்றிலும் இருந்த கூட்டத்தில் ஒருவன் 'சரி கொடுத்துவிடலாம்'என்று சொன்னது கேட்டது.

யாருக்குக் கொடுக்கிறார்கள், யாருக்கு என்று பதறினான்... கிழக்கே பார்த்து நின்றவருக்கு எதிரே ஒருவர் வந்து நிற்க,

''ஜாதகம் வாங்கிக்கட்டே!ஜாதகம் வாங்கிக்கட்டே! ஜாதகம் வாங்கிக்கட்டே!''

இது யாரு? என்று விசாரித்தான்.

பையனுக்கு மாமா!

அய்யோ! அப்படி என்றால் கல்யாணம் எனக்கில்லையா? என்னை அவர்கள் கூப்பிடவில்லையே?...தேவகியைப்பார்த்தான். அவள் பார்வை சரிந்திருந்தது. அதிலிருந்து தன்னைக் காப்பாற்றத்தான் தன்னை விளித்திருக்கிறாளோ!

யாரோ சொன்னார்கள், 'சரி ஜாதகம் கொடுத்து விடலாம்' என்று.

கொடுக்காதே! கொடுக்காதே! வேண்டாம் இதோ நான் இருக்கிறேன்...

பையனுக்கு மாமாவோ யாரோ அந்த ஜாதகத்தை வாங்கிக் கொண்டார். தேவகி இனிஅவர்களுக்குச்சொந்தம். கொஞ்சநாளில் பையன் வந்து அவளைக் கல்யாணம் செய்து கொண்டு போவான்...

''பெண்ணைக் கூட்டிக்கொண்டு வரு...''

தேவகியின் தோளைப் பிடித்துக்கொண்டு பாங்காக இருவர் அழைத்து வர... எளிய

## தமாஷ் பரீட்சை!

படங்களை மீண்டும் புரட்டிப் பார்க்காமல் கீழ்க் காணும் கேள்விகளுக்கு விடை எழுதி விட்டுப் பிறகு ஒப்புநோக்கவும்.

1. நாள் காட்டியில் ஒரே ஒரு தேதி விடப்பட்டுள்ளது. அது எந்தத் தேதி?
2. கடிகாரத்தில் மணி என்ன?
3. மோதிரத்தில் என்ன இனிஷியல் காணப்படுகிறது?
4. ஒரே ஒரு ஆங்கிலக் கவிஞரின் கவிதை நூல் இடம்பெற்றுள்ளது. அக்கவிஞரின் பெயர் என்ன?
5. நீங்கள் படத்தில் பார்த்த ஆத்திச்சூடி வாசகங்களுள் இரண்டாவதாக இடம் பெற்றுள்ள வாசகம் எது?
6. கிரிக்கெட் மட்டையில் அதன் சொந்தக்காரர் பெயர் எழுதப்பட்டுள்ளது. அது என்ன பெயர்?
7. படத்தில் பார்த்த பேனா என்ன பேனா?
8. படகில் எத்தனை பேர் பயணம் செய்கின்றனர்?
9. பூனை பொம்மையின் முகத்தில் ஒரு உறுப்பு வரையப்படவில்லை. அது என்ன?
10. விலைப் பட்டியலில் குறிக்கப்பட்டுள்ள கேரட்டின் விலை என்ன?

பத்துக் கேள்விகளுக்கும் சரியான பதில் சொல்லியிருந்தால் உங்களின் கவனிப்பு சக்தி அபாரம். பெருமைப்பட்டுக் கொள்ளலாம். 7—9 சரியான விடைகள் பாராட்டலாம்: 5—7 சரியான விடைகள்: சுமார் 5-க்குக் கீழே மோசம்! -ஏ.வி.எம். கணேஷ்

முண்டும், மார்பை மறைத்த துண்டும் நெற்றியில் ஒற்றைத் தீற்றலும் நனைந்து பாதி உலர்ந்த தலையுமாக நிலம் நோக்கி நடந்து வந்து நடுவில் நின்றான். அவள் கண்கள் நிமிர்ந்து அவனைப் பார்க்க மறுத்தன. பிரமித்துப் போய்த் தேவகியின் அப்பாவிடம் சென்று ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்தான்.

''எந்தா!''

உண்ணிக்குக் கிடைத்த பணம்! அவன் அக்காவின் கல்யாணத்துக்காக துபாய் போகாமல் சம்பாதித்த பணம்...

இழவன் பேசியதில் புரிந்த பகுதிகளை ஒட்டிப் பார்த்ததில்: பையன் மரிச்சுப் போயிட்டான். எனக்கும் வயசாயிட்டுது. மாப்பிள்ளைப் பையன் திருவனந்தபுரத்தில் ஓட்டலில் முந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறான். இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விட்டால் நான் செத்துப் போய்விடுவேன். அப்புறம் தேவகிக்கு ஆரும் இல்லா!...

களைக் கொன்றான். இவர் பிறந்தப்பவும் அப்படி...''

''கிறிஸ்டியனுவது இந்துவாவது எல்லாரும் முதக்கா இந்துவா இருந்தவங்க தானே!''

''இந்துன்னே யாருமே கிடையாதுங்க. தெரியுமில்லே.''

''அவுங்க கம்பன் திருவிழாவுக்கு வந்தா தடுப்பமா? இல்லே நாமதான் கிறிஸ்மஸ்ஸுக்கு அங்க போவமாட்டமா?...''

ராத்திரி அருகே வர மணற்காடு சண்டைக் களைப்பில் உறங்குவதற்கு ஆயத்தங்கள் பண்ணிக் கொண்டது. கடலில் வெள்ளி அலைகள் சப்தம் பண்ணாமல் புரண்டன. காற்று சிநேகிதமாக வீசிற்று. பொது விருந்தில் பக்கெட் பக்கெட்டாகப் பரிமாறிக் கொண்டார்கள். உதவி கலெக்டர் சிரித்தார். போலீஸ் அதிகாரிகள் தொப்பிகளைக்கழற்றித் தலையைத் துடைத்துக் கொண்டார்கள்.





கனகசபை ஒரு முறை ஒரு முறையாவது தேவகியைத் தனியாகப் பார்க்க விரும்பினான். அறைக்குள் பெண்கள் சூழ சப்பளம் கட்டிக் கொண்டு தலை குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவனுக்கு ஒரு மந்திரக் கோல் தேவையாக இருந்தது. அதன் ஒரு சுழற்சியில் மற்றப்பேர் விலகிப் போகத் தேவகி மட்டும் தனியே கிடைக்க அவள் தோள்களைப் பற்றி எழுப்பி ''வா தேவகி!''

• • •

**சா**யங்காலம் வீட்டுக்குத் திரும்பியபோது மணற்காடு புதுசாக விழித்துக் கொண்டிருந்தது. கம்மர்கட்டுக் கடைகளும் குடை ராட்டினமும் அகாலமாகப் புறப்பட்ட சந்திர ஒளியில் தெரிந்தன.

''கிறிஸ்துவும் கிருஷ்ணனும் ஒண்ணு தாங்க. அவர் பிறந்தப்பவும் ராஜா குழந்தை அடுத்த கலகம், அடுத்த ரத்தச் சிதறல், காலவரையறையின்றி ஒத்தி வைக்கப் பட்டிருந்தது.

கனகசபை கட்டிலில் மல்லாந்து படுத்திருந்தான். அம்மா குறிப்பறிந்து வாசல் திண்ணையில் படுத்திருக்க, கிரிஜாவின் புதிய வளையல்கள் லேசாகப் பேசின. கண்ணில் நிறைய மை இட்டிருந்தாள். கனகசபை கொண்டு வந்திருந்த அத்தனை வாசனைத் திரவியங்களையும் மேனி மேல் பூசியிருந்தாள். நெற்றிக்குப் பெரிசாகப் பொட்டு இட்டிருந்தாள். விளக்கை ஊதி அணைத்தாள். இருட்டில் அவள் வரும் சலனம் புரிந்தது. அதே கட்டிலில் நெருக்கமாகப் படுத்து அவன் கைகளை அழைத்துப்போய் அவள் மேல் சாய்த்து...

''ரொம்ப நாளாச்சில்ல?'' என்றான்.

தலைமாட்டில் முழங்கையைப் பதித்துக் கொண்டு இருட்டு விட்டத்தை நோக்கிய நேர்ப்பார்வையுடன், தனக்கு நிகழ்வதைச் சகித்துக் கொண்டான். **(முற்றும்)**

# நியூட்ரமுல் சக்தி.

## சேம்பியன்கள் தேர்ந்தெடுக்கும் சக்தி.

நியூட்ரமுல். அமுல் பால்வளம். அருமையான மால்ட்.
ஆரோக்கிய வைட்டமின்கள். ஆர்வமிகு புரதம்.
ஆதார உலோகதாதுக்கள். சப்புக் கொட்டிட சாக்கலேட்...
இவ்வளவுக்கும் விலை மலிவு—போர்ன்விடா, பூஸ்ட்,
மால்டோவா எதனையும் விட. மறவாதீர்கள் ஐஎஸ்ஐ தர
முத்திரை தாங்கியது நியூட்ரமுல் ஒன்றுதான்.
விளங்குவீர் நியூட்ரமுல் 'வஸ்தாத்'தாக.






உயரம், வலிமை, உடல்திடம்--
பெருக்குவது எப்படி ?

பார்த்தறியாச் சலுகை: பலம்பெருக்கப் புத்தகம்!

NUTRAMUL P.O. BOX 10148, BOMBAY 400 001.

பெயர் ____________________
(கொட்டை எழுத்துகளில்)

முகவரி ____________________

விற்பனை விநியோகஸ்தர்:
குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெட. லிட.,
ஆனந்த்-388 001.

## அத்தியாயம் 1

அமீதியா ஹோட்டலுக்கு எதிரே நின்று நடேச நாயக்கர் காலணிகளைக் கழற்றினார். கைகளைக் கூப்பினார். ''பிள்ளையாரே பிள்ளையாரே'' என்று தலையில் குட்டிக் கொண்டார். எல்லாம் உன் செயல் என்றார்.

தெருவில் போகிறவர்களுக்கு நாயக்கர் ஹோட்டல் அமீதியாவைத் தொழுவது போலத்தான் தெரியும். ஹோட்டலுக்கு இடப்புறம் சின்னதாய்ச் சித்தி விநாயகர் கோவில் இருந்தது. அந்தக் கோவிலுக்குப் பிறகு சாலை வளைந்து பெரிய தியேட்டர் ஆரம்பமாயிற்று.

கோவில் வடக்குப் பார்த்து இருந்தது. அமீதியா மேற்குப் பார்த்து இருந்தது. நாயக்கர் கிழக்கு நோக்கிப் போக வேண்டியிருந்தது. தெற்குப் பார்த்து வணங்கக் கூடாது. வடக்கே பார்த்தால் பிள்ளையாருக்கு முதுகு காட்ட வேண்டி நேரிடும். நடந்து கோவில் தாண்டி மேற்குப் பக்கம் பார்ப்பது அனாவசியம். எனவே தினமும் அமீதியாவுக்கு எதிரே நின்று வணங்குவதுதான் நாயக்கர் வழக்கம்.

நாயக்கரின் கடவுள் வணக்கம் அதுதான். அவ்வளவுதான். பிள்ளையாரே எல்லாம் உன் செயல் என்பது சத்தியமான வார்த்தை.

இந்த உலகத்தில் எவனும் எந்தக் கொம்பனும் எல்லாம் நான்தான் என்று மார்தட்டிக் கொள்ள முடியாது. சகலமும் தெரியும் என்று அலட்டிக் கொள்ளக் கூடாது. அப்படி அலட்டிய நிறையப் பேரை நாயக்கருக்குத் தெரியும். அவர்கள் மண்ணோடு மண்ணாய்ப் போயிருப்பதும் தெரியும். நல்லதோ, கெட்டதோ நம் கையில் இல்லை. உயர்வோ தாழ்வோ நாம் தீர்மானிப்பதில்லை. அல்பம் என்று ஒரு பொருளும் இல்லை. நேற்றைய அல்பம் இன்றைய அற்புதம். இன்றைய அற்புதம் நாளைய அல்பம். ஆனால் எல்லாவற்றிற்கும் உலகில் விலை உண்டு. எச்சில் இலைக்கு விலை போட்டு எடுத்துப் போகிறவர்கள் உண்டு. சாம்பல் காசு கொடுத்து வாங்குபவர் உண்டு.

'மனுஷன் தலைமுடிக்குக்கூட விலை போடறதுண்டுங்க. உசிருன்னு சொல்றீங்களே அது தாங்க வாங்கவும் முடியலே, விக்கவும் முடியலே. அப்படி அது எங்கேயாவது விக்கிறது மாதிரி ஆயிட்டா கொண்டாந்து இந்தப் பாகல் தோட்டத்துல சரம் சரமா தொங்க விட்டுரு

# இரும்பு குதிரைகள்

பாலகுமாரன்



வானுங்க. விலை கேக்குற ஆளுக்கேத்த மாதிரி வித்துச் சம்பாதிப்பானுங்க.

அட... இந்த இடம் இந்தப் பாகல் தோட்டம் முப்பத்தி ரெண்டுல புறம் போக்கு. தூறல் போட்டா முழங்கால் சேறு. அடிச்சுப் பேஞ்சா நடுமார் ஆழம். நான் இங்கே கைநீட்டி நீச்சப் போட்டிருக்கேன்னு நம்புவியா. சிரிப்பே. அப்போ பட்டணத்துல தென்னை மரம் சிரிப்பா சிரிக்கும். நூலை அறுத்துப் போட்டு வண்டி பாரம் தாங்காத ஏத்தின காயைத் தள்ளி வுட்டுக்கினே போவானுங்க. கோவணம் கட்டின பசங்க எல்லாம் தேங்கா வாரிக்குவம். கல்லு வச்சு நெருப்பு மூட்டி, மரத்துல காயை நெத்தி ஓட்டை போட்டுக்குவம். ஒரு கை நாட்டு சக்கரை கடையில சும்மா குடுப்பான். ஓட்டை வழியா தேங்கா உள்ளப் போட்டுட்டு நெருப்புல சட்டி மாதிரி வச்சுடுவோம். பச்சை மட்டை நாறச் சொல்ல எடுத்துக் கையாலேயே பொளந்து ஓடச்சித் துன்னுவோம். மூணு தேங்கா துன்னு பொம்முன்னு பூடும். என்னு ருசி... என்னு ருசி... நாக்க அறுக்க அப்பிடி ஒரு ருசி.

முதல் வார் வந்தது. எல்லாம் பூட்சி. எல்லாத்துக்கும் துட்டு. வெள்ளிப் பணம். ஆம்பளை வாங்கினுன். பொம்பளை வாங்கினுன். துணி வாங்கினுன். துடப்பம் வாங்கினுன். மந்தார இலை வாங்கினுய்யா துட்டுக் குடுத்து வெள்ளைக்காரன். கட்டுக் கட்டாப் போவும் கோட்டைக்கு. பட்டாளக்காரன் துன்னத் துடைக்க எல்லாம் அதுதான். அப்போ புரண்டது இந்த இடம். இராயப் பேட்டை முதலியாருங்க இங்கே இடத்தை போட்டுக்கிட்டுச் சிமெண்ணெய் வித்தாங்க. கம்பெனியில எண்ணெய் வாங்கி கவர்ன்மெண்டுக்கு வித்தாங்க. கவர்மெண்டுக்குத்



துட்டு குடுக்க முடியலே. குதிரையை எடுத்துக்க, கோச்சு வண்டியை எடுத்துக்கன்னுன். கோட்டையிலேருந்து குதிரை வண்டி வாங்கி மயிலாப்பூர் ஐயருக்கு வித்தாங்க. அன்னிக்குப் புடிச்சது வண்டி வியாபாரம். கீலு, சட்டம், கதவு, ஆணின்னு வியாபாரம் புடிச்சது. வார் முடிஞ்ச மிலிட்டிரி லாரி வித்தான் வெள்ளைக்காரன். அதுவும் வாங்கினுன். ஒடச்சி வித்தாங்க. அன்னிலேர்ந்து இன்னி வரை பாகல் தோட்டத்துல ஒடசல் வியாபாரம்தான். காயல்பட்டிணத்துத் துலுக்கருங்க இங்கே வந்து தெற்குப் பக்கத்துக்கு வாங்கிப் போவாங்க.மதுரை, திருநெல்வேலி வரை வியாபாரம். அப்புறம் காயல்பட்டிணத்து ஆளே கடை போட்டான். சாயவான் கடைன்னு பேரு வந்தது.

ஒன்னு நினைப்புல வச்சிக்க. துலுக்கரு பூந்த வியாபாரம் தோற்றது கிடையாது. ஏன் சொல்லு. கட்டுமானம். துட்டு வூட்டு உள்ளார சுத்தும். வெளியே போவாது. அப்பா கிட்ட புள்ளை கடன் வாங்கும். தேதி சொல்லித் திருப்பிக் கொடுக்கும். பொண்ணு கட்டச் சம்பாதிக்கணும். சம்பாதிக்கிற புள்ளைக்குத்தான் பொண்ணு கெடைக்கும்.

காயல்பட்டிணக்காரன் வந்தப்புறம் நெருப்புப் புடிச்ச மாதிரி பாகல் தோட்டம், சிந்தாதிரிப்பேட்டை, கூவங்கரை ஓரமா இந்தக் கடைங்கதான்.

பென்ஸு வண்டி வாங்கிப் பிரிச்சுத்தான் விப்பாங்க இங்க. பிசிறு பிசிறு வியாபாரம். மூணு வண்டி விலை போகும். பறந்து பறந்து விலை கேட்டியா பத்து ரூபா ஒரு போல்ட். பறக்காத கேட்டியா ஒரு ரூபா அதே போல்ட்டு. கேக்கறதைப் பொறுத்து விலை. பேசறதைப் பொறுத்து வியாபாரம். சிரிச்ச மூஞ்சியா ஒரு ஆளைப் பார்த்துட முடியுமா இங்க. சிரிக்க மாட்டான். காக்கா இறக்கைல இடுப்பு மூட்டினுக் கூடச் சிரிக்க மாட்டான். சரிதான் போடான்னுதான் மூஞ்சி நிக்கும்.'




நடேச நாயக்கருக்கு அறுபது வயசு தாண்டி விட்டது. அவர் சிரித்தும் யாரும் பார்த்ததில்லை. முகத்தில் ஒரு நிரந்தர சோகம் பொத பொத உடம்பு. வெளிறிய பின்னி நீலச் சட்டை. கரை வேட்டி. தோளில் துண்டு. குடை. மடித்த கரை வேட்டி தாண்டிக் காக்கி அரை நிக்கர்.

சென்னையைச் சுற்றியுள்ள தொழிற்பேட்டைகளில் நாயக்கரை எல்லோருக்கும் தெரியும். எல்லா தொழிற்சாலைகளிலும் இரும்புக் கழிவு இருக்கும். உடைந்த, உடைக்கப்பட்ட உதிரி பாகங்கள் இருக்கும். மாதம் ஒரு முறை அவைகளை இருந்த இடத்தில் கிடந்த நிலையில் விலை பேசி நாயக்கர் வாங்கி வருவார். எசமானே என்று விற்பனை அதிகாரியைக் கால் தொட்டுவணங்குவார். அறுபது வயசுக் கிழவனை அதட்ட யாருக்கும் மனசு வராது. அதட்டினுலும் நாயக்கரை அனுப்பிவிட முடியாது.

அதே நாயக்கர் கடையில் வேறு முகம் காட்டுவார்.

''நாயக்கரே பென்ஸு பம்பர் இருக்கா?''

''எத்தினி வேணும்?''

''ஒன்னுதான்.''

''இல்லே.''

''இருக்கா பாரேன்.''

''இல்லே. நாளைக்கு வா.''

''இன்னைக்கு இல்லேங்கற. நாளைக்கு மட்டும் எப்படிக் கிடைக்கும்?''

''எங்கனு பீராஞ்சு வைக்கிறேன் போ.''

நாயக்கரிடம் பென்ஸ் பம்பர் இருக்கும். மறுநாள் அவன் பாகல் தோட்டத்துக்கு வந்தால் விலை சொல்லப்படும். அவனுக்கு பம்பர் மிக அவசியம் என்பது நாயக்கருக்குத் தெரிந்துவிடும்.

நாயக்கரிடம் தற்சமயம் பென்ஸ் லாரியின் சக்கரங்கள் இருந்தன. டயர் இல்லாத இரும்புச் சக்கரம் மட்டுமாய் இருந்தன. அவைகளில் மூன்று மோசமானவை. மெல்லிய விரிசல் உடையவை. நாயக்கர் அதைப் பற்றவைத்துத் தேய்த்து பெயிண்ட் அடித்து வைத்திருந்தார். எடைக்கு வாங்கியவை. தட்டிக் கொட்டிப் பற்றவைத்து பெயிண்ட் அடித்த பிறகு மோசம் எது நல்லது என்று நாயக்கருக்கே தெரியாது. அமிதா ஓட்டலுக்கு அருகே உள்ள பிள்ளையாருக்குத் தெரியும். அவர்தான் இன்று வியாபாரத்துக்கு உதவ வேண்டும்.

பத்து மணிக்குப் பாகல் தோட்டம் களை கட்டியது. கொத்துக் கொத்தாய் மனிதர்கள் இடதும் வலதுமாய் நடந்தன. பீங்கான் தட்டில் இலை மூடி ஏதோ ஒரு கடைக்கு ஆப்பம் குருமா போயிற்று. எங்கேயோ பெரிய வியாபாரம் படிந்திருக்க வேண்டும். எந்தக் கடை என்று தெரியவில்லை. நாயக்கர் கடைக்கு வெளியே வந்து ஆப்பம் போகும் திசையைப் பார்த்தார். ஆப்பம் கூட்டத்தோடு கலந்து விட்டது.

''நாயக்கரே, வீல் வச்சிருக்கியாமே.''

மெகானிக் கண்ணப்பன் உள்ளே வந்து பொத் என்று பெஞ்சில் அமர்ந்தான். கண்ணப்பன் கண்கள் சிவந்திருந்தன.


குழந்தைகளே!
பெரியவர்கள் வாழ்த்துக்கள்!
நீங்கள் ஆவலுடன்
எதிர்பார்த்திருக்கும்
கோகுலம்
இப்போதே பரபரப்பாக
விற்பனையாகிறது!
கௌரவ ஆசிரியர் :
அழ. வள்ளியப்பா
96 பக்கங்கள், தனிப்பிரதி ரூ. 2/-
வருடச்சந்தா ரூ. 24/-
கோகுலம், மாத இதழ்,
கிண்டி, சென்னை-600 032

நாயக்கர் அவனுக்குப் பதில் சொல்லாது வெளியே நின்றபடி தெருவையே பார்த்துக் கொண்டிருந்தார்.

''ஆறு வீல்... பென்ஸு வச்சிருக்கிறதாச் சொன்னாங்க. எடுத்துப்போடு பார்க்கலாம்.''

''யாரு சொன்னது?''

''டிங்கர் ஷாப்புல.''

''சாராயம் வாங்கிக் குடுத்தியா?''

''சாப்புட்டுத்தான் வரேன். எங்க வச்சிருக்க... கூரை மேலயா உள்ளியா...''

''பூமில பொதைச்சு வச்சிருக்கேன். வாங்கறவனுட்டமா பேசற நீ.''

''நான் வாங்காத...அடிச்ச வண்டியிதா? கழட்டினதா?''

''மிலிட்டிரி வண்டி. உனக்குக் கட்டாது இளம்பு.''

''அடிரு சக்கை. பாகல் தோட்டத்துல அத்தினி நாளும் மிலிட்டிரி ஆளுங்கதான். எடுப்பா வீலு.''

''எத்தினி வேணும்?''

''நாலு டஜன். எடு முதல்ல.''

நாயக்கர் பின் பக்கம் போய் ஒரு சக்கரம் உருட்டி வந்தார். கண்ணப்பன் அதை இரும்புத் துண்டால் தட்டி ஒலியைக் கேட்டான். உதட்டைப் பிதுக்கினான். ''தேறாது. வேற எடு.''

''இல்லே.''

''எடுப்பா.''

''இல்லே.''

''இது மிலிட்டரிதான். பாத்துட்டேன். எடு மிச்சம்.''

நாயக்கர் இன்னொன்று உருட்டி வந்தார். மறுபடி கண்ணப்பன் வீலத் தட்டிப் பார்த்தான்.

''என்ன சொல்றே?''

''இரண்டரை.''

''இருநாத்தியம்பதா. அடாவடியா இருக்கே. பாத்துச் சொல்லு.''

''இரண்டு.''

அர்ஜன்டைனாவுக்கும் சிலிக்கும் இடையே ஒரு பெரிய ஏசு கிறிஸ்து சிலை அவ்விரு நாட்டின் சமாதானச் சின்னமாக நிற்கிறது. இந்தச் சிலை உருவான விதம் வேடிக்கையானது. அந்தச் சிலைக்குத் தேவையான உலோகம் ஒரு போரின்போது சிலியும் அர்ஜன்டைனாவும் பயன்படுத்திய பீரங்கிகளை உருக்கியதில் கிடைத்தது.

—பிரகாஷ் முரளி



''அப்புறம்.''

''கையை எடு.''

''என்னு''

''எடு சொல்றேன்.'' நாயக்கர் அவன் கையை விலக்கி விட்டு வீலை உள்ளே உருட்டிப் போனார். வந்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார்.

''அப்புறம் என்னதான் சொல்ற?''

''ஒண்ணும் சொல்லலே.''

''விலை சொல்லுப்பா.''

''சொல்லிட்டேன்.''

''ஒன்னரைக்குத் தருவியா?''

''ஒண்ணுதொண்ணூருக்குக்குறையாது.''

''ஒண்ணு அறுபது.''

''வேற கடை பாருப்பா. பேஜார் பண்ணாதே.''

''சரி. ஒண்ணு எழுபது.''

''எண்பது போடு.''

''எல்லாத்தியும் எடு.''

நாயக்கர் அவனைப் பின் பக்கம் கூட்டிப் போனார். கண்ணப்பன் தடுமாறினான். இரும்புக் குவியல்களை இடறியபடி போனான். சக்கரங்களைத் தட்டிப் பார்த்தான்.

சக்கரங்கள் நின்ற இடத்தில் இரும்புப் பலகை போட்டிருந்தது. கண்ணப்பன் தட்டியது இரும்புப் பலகையைத் தாக்கி ஒலி அதிர்வைக் கூட்டியது. விரிசல் தெரியாது போயிற்று. கண்ணப்பன் வாங்கிய இரண்டு வீல்களும் விரிசல் உள்ளவை.

ராவுத்தர் வண்டிக்குத் தேவையானவை.

''ஏ கிளாஸ் மிலிட்டரி வண்டியிது, சாய்பு. இருநூறுக்குக் குறைய மாட்டேனுட்டான். மன்னாடி எடுத்தாந்து மாட்டியிருக்கேன்.''

எடைபோட்டு எழுபதுக்கு எடுத்த வீல் நூற்றி எண்பதுக்கு விற்கப்பட்டது. இருநூறு என்று சொல்லப்பட்டது. பதின்மூன்று டன் கோதுமையோடு அன்றிரவு நெல்லூர் நோக்கிப் புறப்பட்டது.

ராவுத்தர் லாரி டிரைவர் வரதன் புழலேரி தாண்டியதும் வண்டி அலைவதை உணர்ந்தான். இறங்கித் துணிக் கத்தையை டீஸலில் தோய்த்துக் கொளுத்திப் பந்தம் எரியும் வெளிச்சத்தில் சக்கரங்களைப் பார்த்தான். ஏதும் தவறு தெரியவில்லை.

பெரியபாளையம் பிரிவில் லாரி விநோதமாய்க் குலுங்கிற்று. மாட்டு வண்டித் தொடர்களைக் கடக்க ஒடித்தபோது மீண்டும் அலை பாய்ந்தது. திடீரென்று பின் பக்கம் சத்தம் கேட்டது. பின் பக்கம் அமுங்குவது தெரிந்தது. காற்றுத் தடை போடுவதற்குள் இடது பக்கம் சாய்ந்து நெளிந்து கரகரவென்று இழுக்கப்பட்டு சாலை ஓர சரிவில் இறங்கி வயல் வெளியில் தேய்ந்து ஒரு கிணற்று விளிம்பில் மோதிச் சுவரை உடைத்து நின்றது. வரதன் குனிந்து பார்த்தான். தண்ணீர் தெரிந்தது. மெல்ல இறங்கிச் சுவரில் கால் வைத்துத் தரையில் குதித்தான். வண்டிக் கதவைத் திறந்து சீட்டுக்கடியில் உள்ள தன் பையையெடுத்தான். டிரைவர் லைசென்ஸ் இருக்கிறதா பார்த்தான். வண்டியை விட்டு விட்டு நெல்லூர் பஸ் ஏறிக்காணாமல் போனான். (தொடரும்)

# பொதுமக்கள் அனைவருக்கும் எமது அன்பான பொங்கல் வாழ்த்துக்கள்




## லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுலகம் : கரூர்-639 001
நிர்வாக அலுவலகம் : சென்னை-600 086.

என். முத்தியாலு
சேர்மன்

அன்னியச் செலாவணியில்
வர்த்தகம் செய்ய
அங்கீகாரம் பெற்றவர்கள்.



எங்கள்

**லக்ஷ்மி க்ருபா டெபாசிட் திட்டம்**

**லக்ஷ்மி கேஷ் சர்டிபிகேட்**

திட்டங்களில் முதலீடு
செய்து செல்வச்
செழுமை பொங்கும்
வருங்காலத்துக்கு
வழிகோலுங்கள்.



# அடிமை

ஷிவயவன்

"இன்னிக்கு எங்கே?''

'அட்லாண்டிக் ரிவியூ'வில் மூழ்கியிருந்த மாலியின் அருகில் வந்து நின்ற பிருந்தா அந்த 'லைப்ரரி'யின் நாசூக்கு பாதிக்காத குரலில் கேட்டாள்.

மாலி நிமிர்ந்தான்.

லிப்ஸ்டிக், சானல் 54, பொருன்லா என்று எந்த ஆடம்பரமும் இல்லாமல் பிருந்தா எளிமையாக நின்றாள். ஒரு வாயில் சேலை. நெற்றியில் குங்குமம். கழுத்தில் ஒரு பிளாஸ் டிக் மணி மாலை.

ஒரு மணி நேரமாக அவளுக்காகக் காத்திருந்த கோபம் அந்த எளிமை அலங்காரத்தில் நீறு போல் பூத்து விட்டது.

''வெளியே'' என்று சொன்னவாறு மாலி எழுந்தான்.

வாசலருகே வரும்போது பிருந்தா கையிலிருந்த டோக்கனைக் கொடுத்தாள். அப்போதுதான் மாலி அவளிடமிருந்த புத்தகத்தைப் பார்த்தான். டால்ஸ்டாயின் அன்னு கரீனிறு.

நேற்று மாலை ஹைகோர்ட் வராந்தாவின் கடப்பைக் கல்லின் மீது உட்கார்ந்து அதைப் பற்றிப் பேசியது ஞாபகம் வந்தது.

அவர்கள் இரு நிமிஷத்தில் சாயங்காலத்து மவுண்ட் ரோடின் சஞ்சாரப் பதற்றத்திற்கு வந்தனர்.

''இன்னிக்குக் காரை அனுப்பிட்டேன்.'' பிருந்தாவே சொன்னாள்.

''கிரேட் ரிலீஃப்.'' என்றான்.

''ஏன்?''

''பின்னே என்ன? எஜமானியின் கள்ளக் காதலன் மாதிரி ஒரு குற்ற உணர்ச்சியோடு டிரைவர் பக்கத்திலே ஒக்காந்துண்டு வரணும்!''

பிருந்தா அவன் வெளிப்படையில் நெகிழ்ந்தாள்.

''இன்னிக்கு எங்கே?''

அவள் கேள்வியை ஒதுக்கிவிட்டு அவன் பதில் கேள்வி போட்டான். ''ஒங்க எம்.டி. என்னிக்கு வர்றார்?''

''நாலு நாள் இருக்கு.''

''மயிலாப்பூர் பீச் போவோம்.''

அவர்களைக் காலியாகக் கடந்த டாக்ஸியை நோக்கி அவள் கைதட்டினாள். ''டாக்ஸி!''

''நோ... பஸ்ஸிலே போவோம்... சாரி... நீ போப்பா.''

டாக்ஸி முறைத்துக் கொண்டு கடந்தது.

''பஸ்ஸிலேயா... நான் பஸ் ஏறி நாலு வருஷம் ஆச்சு! அந்த ரெஷ்ட்லே அடிச்சு நெருக்கிக்கிட்டு மாலி... இதென்ன 'க்ரேஸி' ஐடியா.''

''அம்மணி, என் வர்க்கம் அதுதான்.''

''வர்க்க போதம் போதும். நட... அதென்ன மயிலாப்பூர் பீச்?''

''லோன்லியா இருக்கும்.''

அவள் புருவங்கள் உயர்ந்தன. பிருந்தாவின் புருவங்கள் உயரும்போதெல்லாம் அவளது ஆதார சக்தியில் ஒரு வசீகரமான ஆதிக்கம் கூடும்.

''எனி ப்ளாக் ஐடியா?''

''நதிங் ப்ளாக். இது வளர் பிறை. பீச் ஓரமா வழியிலே மட்டன் சாப்ஸ் போடு வாங்க.''

அவர்கள் பஸ் ஏறினார்கள். இருவர் மனசுக்குள்ளும் ஏதோ இன்று நடக்க வேண்டும் என்ற வேட்கை இருந்தது. மாலி அவளுடைய எம். டி. மேற்கு ஜெர்மனிக்கும் அங்கிருந்து கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கும் பயணமான அன்று மாலைதான் பிருந்தாவைச் சந்தித்தான். அவனது வேலை விஷயமாக. இன்றோடு நாற்பத்தி ஏழு நாட்கள். அவளைப் போன்ற ஒரு பெண்ணுக்கும் அவன் மாதிரி ஓர் ஆணுக்கும் மத்தியில் இந்தக் கணிசமான கால அளவுக்குள் நடந்திருக்க வேண்டிய எதுவும் நடக்கவில்லை.

அதற்குப் பிருந்தாதான் காரணம்.

அவளைச் சந்தித்த நாட்களில் மாலி மகிழ்ச்சியோடிருந்தான். மாலிக்கு மகிழ்ச்சி சொத்து. இரண்டு சகோதரிகள் கல்யாணத்துக்குக் காத்திருந்தனர். படித்தபோது வாங்கின நில அடமானக் கடனுக்கு இரண்டு முறை ஜப்தி வந்து விட்டது. தங்கியிருந்த நண்பன் அறையைக் காலி செய்யும்படி அந்த ஹோட்டலை வாங்கிவிட்ட உரிமையாளன் இவசரி தகராறு செய்தான். அவனிடமிருந்து இரண்டாவது செட் டிரஸ்ஸை அயர்ன் பண்ணும்போது லாண்டரிக்காரன் போசுக்கி விட்டான். ஆனாலும் மாலியின் மகிழ்ச்சியை எதுவும் பாதிக்கவில்லை.

''ஒனக்கு வருத்தமில்லேன்னு சொன்னு அது ஒரு டெலிபரேட் லை. பச்சைப் புளுகு... நீ என்னை 'இம்ப்ரஸ்' பண்ணப் பார்க்கறே!''

''பிருந்தா... ஒங்களுக்கு எல்லாம் இருக்கு கார்.. பங்களா... ஏ. ஸி.... ஃப்ரிட்ஜ், ஃபோன். கை சொடுக்கினு ஒங்க விருப்பத்தைப் பூர்த்திசெய்ய மகா சக்தி வாய்ந்த ஒரு எம். டி. நீங்க சந்தோஷமா இருக்கீங்களா?''

''இல்லே.''

''ஏன்?''

''எனக்குச் சுதந்திரம் இல்லே. நான் வெறும் கருவி. எம். டி.யோட கான்க்யூபைன் ஆசை நாயகி. ஜஸ்ட் அவர் ரிலாக்ஸ் பண்ணிக்க உதவற ஒரு மிஷின்.''

''ஒங்களுக்கு இதிலே சந்தோஷமே இல்லேன்னு சொன்னு அது ஒரு டெலிபரேட் லை. பச்சைப் புளுகு. நீங்க என்னை 'இம்ப்ரஸ்' பண்ணப் பார்க்கிறீங்க... இப்படி நான் சொல்லலாமே.''

அவன் விவாதத்தை ஆரம்பிக்கிறானு முடிக்கிறானு என்று அவள் தாமதித்தாள்.

''இந்த ஸ்டேட்டஸ்லே ஒரு சந்தோஷம் இருக்கு. இல்லேன்னு ஒங்களை யார் கட்டி வச்சிருக்காங்க?''

''ப்ரொஸீட்'' இவ்வளவு நேர்முகமாகத் தாக்க இடம் கொடுத்ததற்கு அவன் சற்று வருந்தினான்.

''சந்தோஷம் எங்கேயும் இருக்கு. யூ ஆல்வேஸ் மிஸ் இட். தேடத் தொடங்கும் போது அது மாயமாகி விடுகிறது.

''ஜே. கிருஷ்ணமூர்த்தியா?''

''இல்லே. கே. மகாலிங்கம் என்கிற மாலி. பிருந்தா. நான் என்ன ஒரு கொடேஷன் ஆசாமின்னு நெனெக்கிறீங்க! ஐ டோன்ட் பிரிடெண்ட்.''

''ஸாரி.''

''நான் இண்டெலக்சுவல் இல்லே. அப் படி நான் போஸ் பண்ணவுமில்லே. ஒரு சிம்பிளான மனுஷன். சந்தோஷமா இருக்க நெறைய வெளித் தேவைகள், புறச் சிக்கல்கள் எதுவுமே முட்டுக்கட்டை இல்லேன்னு ஃபீல் பண்றேன்.''

''அப்ப எதுக்கு வேலே தேடி வந்தே?''

''வேலே கெடைச்சா இன்னும் ரெண்டு மூணு பேரைச் சந்தோஷப் படுத்தலாம்... தட்ஸ் ஆல்.''

அதிலிருந்து பிருந்தாவுக்கு அவன் மீது பொறாமை ஏற்பட்டது. அவன் வருகை, மலர்ந்த முகம், நதி ஒழுகுவது போன்று அலட்டிக் கொள்ளாமல் பேசும் பேச்சு, தனது அழகின் ஆதிக்கத்துக்குள் சிக்காமல் உடம் பின் கவர்ச்சி எல்லேகளைக் குறித்து அக்கறை யில்லாமல் நேரே உட்புகுந்து ஓர் உள் வெளிச்சத்தோடு அவன் உரையாடியது எல் லாமே பொறாமையாக இருந்தது.

''ஆர் யூ அன் இம்பொடெடென்ட்?''



அவனது ஆண்மையைச் சந்தேகிக்கிற கேள்விக்கு அவன் அழகாகப் பதில் அளித்தான்.

''எதையும் ஒங்க கிட்டே நிரூபிக்க வேண்டிய அவசியம் எனக்கு ஏற்படல்லே.''

''பின்னே ஏன் என்னை டெய்லி பார்க்க வர்றே?''

''ஒங்களோட இருந்தா இன்னும் சந்தோஷமா இருக்கேன்.''

அப்படி யாரும் அவளிடம் சொன்னதில்லை. அவளது எம். டி. கூட. எம். டி. யும் மற்றவர்களும் அவள் அழகை அடிமைகள் மாதிரி கவர்ந்து தம்மிடம் வைத்துக்கொள்ளத் துடித்தவர்கள். அதற்கு இரையான பலவீனத்தை அதன் பாதுகாவலர்கள் போன்று காட்டிக் கொள்ள முயல்வார்கள். அடிமைகளுக்கு மகிழ்ச்சி ஏது?

''என்னோட இல்லேன்னு வருத்தப்பட மாட்டியா?''

''ஐம் ஸாரி... மாட்டேன்.''

இந்தப் பதில் பிருந்தாவுக்கு மிகவும்பிடித்தது. எடுத்த எடுப்பில் வருத்தமாகவும் ஏமாற்றமாகவும் இருந்தாலும் அந்த சுதந்திரம் அவளை வெகுவாகக் கவர்ந்தது.

அவனது மகிழ்ச்சியை ஒவ்வொரு நாளும் இனுக இனுகாக அதிகரிக்கச் செய்து அதைத் தான் ரசிப்பதில் அவள் ஒரு நிறைவை அனுபவித்தாள். அதற்காக மகாபலிபுரம், கோல்டன் பீச், சைனு பஜார், மாம்பலம் என்று நினைத்த இடங்களுக்கெல்லாம் அவனோடு அலைந்தாள்.

பஸ்ஸிலிருந்து இறங்கும்போது இன்னும் மாலை மயங்கவில்லை. வெறிச்சிட்ட மணற் பரப்பில் வெய்யிலில் சில செம்படவக் குழந்தைகள் பச்சைக் குதிரை தாண்டின.

''சாந்தோம் பீச்சுக்குப் போவோமா?'' பிருந்தா கூப்பிட்டாள்.

''ஏன் இது பிடிக்கலியா?''

''ரொம்ப வெளிச்சமா இல்லே... போய் வேணும்னு திரும்பி வருவோம்.''

''ஆல்ரைட்... பீச்சுக்கு வேணும். அங்கே ஒரு செமட்ரி இருக்கு...''

''கல்லறைக்கா... இது என்ன விநோதமான டேஸ்ட்?''

''ஐ லைக் இட். சமாதிகள் எனக்கு ரொம்பப் பிடிக்கும். போன வருஷம் ஒரு சாந்தோம் ஃப்ரெண்டைப் பார்க்க வந்தேன். அவன் பக்கத்து வீட்டிலே ஒரு டெத். வயதுப் பொண்ணு. என்ன கலர்... என்ன மொகம்கிறீங்க... அப்பா... மார்வெலஸ். தேவதைதான். ஒரே நாள் ஜுரத்திலே செத்துப் போயிட்டா. பிரெய்ன் ஃபீவர்... காம்ப்ளிகேஷன். என்னமோ ஒரு டயக்னஸிஸ்... ஏஞ்சல் மாதிரி இருந்தா....''

''அவளை நீ லவ் பண்ணியா?''

''உயிரோட இருக்கிற வரையிலும் நான் பண்ணலே. என் ஃப்ரெண்ட் லவ் பண்ணுறன். ஒருதலை. அவ செத்தப்பறம்தான் சொன்னன். அவனோட போய் மலர் வளையம் வச்சேன். அப்புறம் நான் லவ் பண்ண ஆரம்பிச்சேன்.''

''செத்த பிறகா?''

''எஸ்...''

இவன் பைத்தியமா... இல்லை பிதற்றுகிறானா?

''அவளோட 'பரியலு'க்கு ப்ரெண்டாவே போனேன். மூணு மாசத்துக்கு அப்புறம் கல்லறைக்குப் போனேன். சலவைக் கல்லிலே என்ன லவ்லியா ஒரு சமாதி கட்டியிருக்காங்க தெரியுமா?''

''மாலி நான் அங்கெல்லாம் வர மாட்டேன்.''

''யூ ஆர் ஜெலஸ்.''

அதை மறுப்பதற்காகவே அவள் வர ஒப்புக்கொண்டாள்.

''சரி. போகலாம் வா.''

அவர்கள் கல்லறைக்குப் போனார்கள். சமாதி பச்சை 'மார்பிளில்'. அற்புதமாய் இருந்தது. 'கோதிக்' வேலைப்பாடு. ரோமானிய கம்பீரம். சலவைக் கல்லைப் பார்க்கும் போது கண்ணுக்கே சில்லென்றது.

''இது மேலே படுத்துக்கனும் போல இல்லே'' என்று அவன் கேட்டான்.

''ஆமா... ஒன்னோடு. இன் எ ஃபுல் மூன் டே....''

''டு கெட் பர்ட்?'', அவன் அவளைத் திரும்பிப் பார்த்துக் கேட்டான்.

''இன் ஸெக்ஸ்'' என்று அவள் திருத்தினாள்.

இவ்வளவு வெளிப்படையாக அவள் பேசுவாள் என்று மாலி எதிர்பார்க்கவில்லை.

''இது ஒரு புனிதமான இடம்'' அவன் ஆட்சேபிப்பது போல் சொன்னான்.

''செக்ஸ் புனிதமில்லேங்கறியா?''

''தூய்மையான எல்லா சந்தோஷமும் புனிதமானவைதான்.... நாம மயிலாப்பூர் பீச்சுக்குப் போவோம்''

கலங்கரை விளக்கம் வெளிச்சத்தின் வாளை மாற்றி மாற்றி வீசிக்கொண்டிருந்தது. இடுப்பு

**இவைகள் எதைக் குறிக்கின்றன!**

இங்கே இரு பகுதிகளில் இரு வகையான படங்கள் வரையப்பட்டுள்ளன. இவை சில அர்த்தங்களை உணர்த்தப் பயன்படுத்தப்படும் சைகைகள், குறியீடுகள். முதல் பகுதி படங்கள்தொலைக் காட்சி நிலையத்தில் ஸ்டுடியோ மானேஜர் பயன்படுத்துவன. இரண்டாவது பகுதி வானிலை அறிக்கைகளில் பயன்படுகின்றன.



உயரத்துக்கு வலைக்குக் கட்டும் கயிற்றுச் சுருணைகள் நாளைக்கோ மறுநாளோ அடுத்த கடல் பயணத்துக்குக் காத்திருந்தன. ஆங்காங்கே நிலா வெளிச்சத்தில் பழகிய காதலர்களும் புதிய காதலர்களும் ஆவேசமாகத் தங்களைக் கரைத்துக் கொண்டிருந்தனர்.

ஒரு கயிற்றுச் சுருணை ஓரமாக இருவரும் தனிமையில் உட்கார்ந்தனர்.

''இதுக்குத்தான் இந்த இடத்துக்கு வரணும்னியா?''

''இல்லே, எந்த டிஸ்டர்பன்ஸூம் இல்லாம பேச இது தனி இடம்.''

''நாம்ப நாப்பத்தேழு நாளா ரொம்பப் பேசிட்டோம்.'' பிருந்தா அவன் மீது உரசுமளவு நெருக்கமாய் வந்து உட்கார்ந்தாள்.

''நோ ப்ளீஸ். இட் ஸ்டார்ட்ட் க்ளீன்லி. முடியறதும் க்ளீனா இருக்கட்டும்.''

''யூ மேக் மீ எ வாம்ப்.'' அவள் அவன் தோள் மீது கை போட்டாள். அன்றுதான் ஷேவ் செய்த கன்னத்தின் மீது உதட்டை வைத்தாள்.

''இது ஒரு ரெஸ்பான்ஸிபிலிடி. நீங்க ஒங்க எம். டி. கஸ்டடியிலே இருக்கீங்க. எல்லாத்தையும் உதறிட்டு என்னோட வரீங்களா... நாம ரெண்டு பேருமா சேர்ந்து கஷ்டப்படுவோம். அந்தக் கஷ்டத்துக்குள்ளாற சந்தோஷப்படுவோம்...எனக்குத் திருடித் தின்னப் பிடிக்காது.'' அவன் தோளிலிருந்து அவள் கையை இங்கிதமாய் விலக்கினான்.

''மாலி இது மேல்-ஷோவினிசம்.''

அவன் அவள்மீது இரக்கமுற்றது போல் தலையை அசைத்தான். ''இல்லே. இதுதான் அசல் ஆண்பிள்ளையிசம்.''

''மாலி... அடிமைகள்ளாம் சேர்ந்து என்னை அடிமையாக்கி வச்சிருக்காங்கடா.''

''நீ என்னோட வா பிருந்தா.''

''எங்கே?''

''நான் எங்கேயோ அங்கே.''

''அது முடியாது.... ஒனக்கு இன்னும் ஒரு வேலை கூட இல்லே....''

''ஸாரி பிருந்தா... அது முடியாதுன்னு இதுவும் முடியாது. யாரோ ஒன்னை அடிமைப்படுத்தி வச்சிருக்கிறதுக்கு நீ பண்ண வேண்டிய பரிகாரம் துரோகம் இல்லே.''

''ஸ்டாப் ப்ரீச்சிங்.''

''ஐ டோண்ட் ப்ரீச். ஐ லவ் யூ. ஐ காண்ட் மிஸ்யூஸ் யூ. ப்ளீஸ் நீயும் என்னை யூஸ் பண்ணிக்க வேண்டாம்....'' அவன் மணலைத் தட்டிக் கொண்டு எழுந்தான்.

''கடைசியிலே இவ்வளவுதானா?''

அவள் குரல் கலங்கிற்று. அவன் மீண்டும் கீழே உட்கார்ந்தான். முதன் முறையாக அவள் முகவாயைத் தொட்டான்.

''ப்ருந்தா... ப்ளீஸ்... என்னைப் புரிஞ்சுக்கோ. ஐ லவ் யூ ஃப்ரம் டாப் டு பாட்டம். நீயே உன்னைக் கொடுக்கத் தயாரா இருக்கே. டு யூ நோ ஹவ் ஐ ஃபீல்? ஒங்கிட்ட முதல்ல வந்தப்ப ஒரு வேலைக்கு 'ரெகமெண்ட்' பண்ணுவேன்னு வந்தேன். ஆனா இப்ப எனக்கு அந்த வேலை வேண்டாம்னு தோணுது. ஒன்னை நான் ஏதாவது கேக்கணும்னே தோணையில்லே.... வேண்டாம்...தாங்க்யூ, தாங்க்யூ ஃபார் எவ்ரிதிங்.''

அவள் கயிற்றுச் சுருணை மீது சிலை போலச் சாய்ந்தாள்.

''நான் மட்டுமே உனக்கு வேணும்னு இன்னும் நாலு நாள் ஒனக்கு டயம் கொடுக்கறேன். ஒங்க எம்.டி. வந்த பிறகு ஒரு குட்பை சொல்லிட்டுக் கிளம்பி வா. கம் டு மைரூம். ரொம்ப டயம் ஆச்சு.... இப்பப் போலாமா?''

ஒரு விசும்பல் அலைகளின் முழக்கத்தில் அர்த்தமிழந்தது.

ஆறு நாட்கள் வரை தன் ரூமில் அவளுக்காக அவன் காத்திருந்தான். அவள் வரமாட்டாள் என்று நிச்சயமாகத் தெரிந்தும் உள்ளூர ஒரு நப்பாசையோடு எதிர்பார்த்தான். கடைசியில் ரூம்மேட்டிடம் விடை பெற்றுக் கொண்டு அவன் வெளியே கிளம்பினான். எதிரில் மாடி ஏறி வந்த தபால்காரர் அவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தார்.

உடைத்தான். அது ஒரு அப்பாய்ண்ட்மெண்ட் ஆர்டர். அவளது எம். டி. மூலமாக அனுப்பப் பட்டிருந்தது. நிச்சயம் அவள் சிபாரிசுதான். அவன் துயரத்தோடு சிரித்துக் கொண்டான். அந்த அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டரைக் கிழித்தெறிந்துவிட்டுப் படி இறங்கத் தொடங்கினான். அதைக் கிழித்தெறிந்ததில் நிம்மதி ஏற்பட்டிருந்தது.

**முதல் பகுதி விளக்கம்:**

(அ) நிகழ்ச்சியைத் தொடங்கலாம்.
(ஆ) நிகழ்ச்சியை வழங்க ஸ்டுடியோ இன்னும் தயாராகவில்லை.
(இ) நிகழ்ச்சியை முடித்து விடுங்கள்.
(ஈ) நேரம் அதிகமாக இருக்கிறது. நிகழ்ச்சியை மெதுவாக நடத்திச் செல்லுங்கள்.
(உ) சரியான வேகத்தில் நிகழ்ச்சி சென்று கொண்டிருக்கிறது.

**இரண்டாம் பகுதி:**

(1) தெளிவான மேகம். காற்று மணிக்கு ஒன்று முதல் நான்கு மைல்கள் வேகத்தில்.
(2) தெளிவான மேகத்தோடு காற்று மணிக்கு 15 முதல் 20 மைல் வேகம் கொண்டுள்ளது.
(3) சிறிது மேக மூட்டத்தோடு காற்றின் வேகம் மணிக்கு 21 முதல் 25 மைல்கள்.
(4) சிறிது மேகமூட்டத்தோடு காற்றின் வேகம் மணிக்கு 32 முதல் 37 மைல்கள்.
(5) மேகம் முழுவதுமாக மூண்டிருக்கிறது. காற்றின் வேகம் 55 முதல் 66 மைல்கள்.
(6) முழு மேக மூட்டம். காற்றின் வேகம் 67 முதல் 71 மைல்கள்.
(7) புயல்.

**- ஏ. வி. எம். கணேஷ்**

சரி சரிங்க,
எங்களுக்கு என்ன வாங்கியாந் தீங்க.

சென்ட்டு சரோஜா, சென்ட்டு! உங்கிட்ட படிப்பு வாசனைதான் இல்லே. சென்ட் வாசனையாவது இருக்கட்டுமேனுதான்.

ஆமாம்! நான் சென்ட் தடவிண்டுட்டா, மெயுநீ நான் சொல்றபடி எல் லாம் கேட்டு ஆடப் போறீங்களாக் கும்!

இல்லியா பின்னே! எனக்கு சில சமயங்களில் சந்தேகம் வருது. நீ வெறும் சரோஜாவா... இல்லே புலியூர் சரோஜாதேவியான்னு! என்னமா ஆட்டி வைக்கிறே!

அதுதான் போங்க! உங்க பொண்ணு நேத்து என்ன செஞ்சா தெரியுமா?

என்னமா செஞ்சே நீ?

நான் சொல்றேன். ஜோஸ்யர் கிட்டே என் ஜாதகத்து மூலையிலே மஞ்ச தடவி குட்டீன்னேன்...

....என் ஜாதகம் என்னை மாதிரி மாடர்னா இருக்கணும் 'கண்ட்ரியா இருக்கக் கூடா துன்னு, இரத்தில லிப்ஸ்டிக் தடவிக் கொடுத்திட்டேன். எப்படி?

குரும்புப் பொண்ணு! ...ஜாலிக் கண்ணு! வா வாங்கியாந்த தெல்லாம் காட்டுறேன்.

போப்பா! எல்லாம் கொண்டு வந்தீங்க... ...ஆளுக்கு 'விடி யோ' வை விட்டுட்டீங் களே.'

வீராசாமி "பாம்பேபிளெஞ்" போல வெடிக்கிறார்.

ஷட் அப் ஜானி, , செருப்பதிப் பிசாசு

அப்பா... நான் என்னப்பா சொல்லிட்டேன் விடியோ தானே...

இ லே... ஷட் அப் போ உள்ளே. என் கோபத்தைக் கிளறாதே.

தொடரும்

## எமது உளங்கனிந்த பொங்கல் வாழ்த்துக்கள்

**சுகேசனில் முதலீடு செய்பவர்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டிருக்கிறது . . .**

## நீங்களும் அவர்களை தொடருங்கள்

எங்கள் பேரில், எங்களிடம் முதலீடு செய்பவர்களின் அனுபவபூர்வமான நம்பிக்கையின் பிரதிபலிப்பு- நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டிருக்கும் அவர்கள் எண்ணிக்கை, நீங்களும் அவர்களை பின்பற்றி பயன் அடையுங்கள்

நாங்கள் டிபாசிட்டுகளை ஏற்றுக்கொண்டு பின்கண்ட விகிதத்தில் வட்டி அளிக்கிறோம்.

**15%-18%** மாதந்தோறும், காலாண்டுதோறும், அரையாண்டுதோறும் மற்றும் ஆண்டுதோறும் வட்டி தரப்படும்

**23.19%** (ஏறத்தாழ) வட்டியும் டிபாசிட்டும் 3 ஆண்டு காலத்திற்கு பிறகு திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.

**66.67%** (ஏறத்தாழ) வட்டி, 3 வருட ரொக்க சர்ட்டிபிகேட்டுகளுக்கு வழங்கப்படும்

குறைந்த பட்ச டிபாசிட்டாக ரூ 1000/-ம் மற்றும் 500/ன் மடங்குகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.



SUGESAN FINANCE INVESTMENT



38, Rajaji Road, Madras-600 001.
Phones: 36870, 22495, 22466/67.
Telex: 041/480. Grams: SUGESANS.

ADSERVICE-S-1377

BRANCHES AT: AHMEDABAD, BANGALORE, BOMBAY, CALCUTTA, COCHIN, COIMBATORE, HYDERABAD & RAJKOT.

---

அன்பர்கள் அனைவருக்கும் எமது பொங்கல் வாழ்த்துக்கள்

# பழனியில் சிகிச்சை



**பெறுங்கள் இதுவரை நீங்கள் கஷ்டத்துடன் அனுபவித்த வியாதிகள் நீங்கி சுக வாழ்வு பெறலாம், வருக!**

பிரபல உலகப் புகழ் வைத்திய மன்னன்

## Dr. S. காளிமுத்து,

R.M.P., (IND), V.V.C., A.M.I.H., R.A.M., P.R.H.M.P.,

அவர்களை பழனியில் 23-ந் தேதி முதல் 31ந்தேதி வரை அவர் தலைமை அலுவலகமான பழனி டவுன் பழைய தாராபுரம் ரோட்டில் உள்ள பழனி சித்தர் வைத்தியசாலை (Regd)யில் காலை 10 மணி முதல் பகல் 12 மணி வரை, மாலை 4 மணி முதல் 6 மணி வரையிலும் நேரில் வந்திருந்து ஆலோசனையுடன் எல்லா வியாதிகளுக்கும் சிகிச்சையும் மருந்துகளும் பெறலாம்.

நீங்கள் கவலைப்படும் பிரச்சினையான தாம்பத்திய வாழ்வில் குறைபாடு, சோர்வு, வீரிய குறைவு, குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை, நரம்பு தளர்ச்சி, தேக உறுப்புக்கள் மெலிவு, குழந்தை செல்வம் இல்லாமை, அணுக்கள் குறைவு, வெட்கம், நடுக்கம், இருமல், கபம், தும்மல், வாதநோய், வாய்வு, வயிற்றுவலி, உள்-வெளி ரத்த நவமூல வியாதிகள், குடல் புண், வாந்தி மற்றும் இதில் கூறப்படா நோய்களுக்கும் 86 வருட அனுபவ மருந்துகளும் ஆலோசனையும் நேரில் டாக்டரிடம் பெற்று சுகமடைய அழைக்கிறோம். வணக்கம்.

**பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) பழனி–624 601**

போன்: 316, 316ஏ. ★ வீடு: 420 ★ தந்தி: சித்தர்

**சமீபத்தில் மணிவிழா கண்ட தி. மு. க. பொதுச் செயலாளர் திரு அன்பழகன் அவர்களுக்கு 'கல்கி' வாசகர்கள் சார்பில் வாழ்த்து தெரிவித்து விட்டு, ஆறு கேள்விகள் கேட்டோம்.**

# அன்பழகனிடம்

## ஆறு கேள்விகள்

தி. மு. க. — இ. காங்கிரஸ் உறவைப் பற்றித் தெளிவாகக்கூற முடியுமா? ஏனென்றால் கர்நாடகத்திலும் பெரியகுளத்திலும் எதிர்த்துப் போட்டியிட்டீர்கள். ஆந்திராவில் இ. காங்கிரஸுக்கு ஆதரவு கொடுத்திருக்கிறீர்கள். பாண்டிச்சேரியில் கூட்டணி அரசு அமைத்திருக்கிறீர்கள்!

''இ. காங்கிரஸுடன் உறவு இருக்கிறது. தேர்தலுக்குத் தேர்தல் எதிர்ப்பு — ஆதரவு என்ற நிலை வரக் காரணம், அந்த அந்த சூழ்நிலைதான். பெரியகுளத்தைப்பொறுத்தவரை, எங்கள் கட்சி உறுப்பினர் தேர்ந்தெடுக்கப் பட்ட தொகுதி. ஆகவே அங்கு போட்டியிடுவது எங்கள் கடமை. சிலரது தவறான ஆலோசனையால் காங்கிரஸும் அங்கு போட்டியிட்டது. கர்நாடகத்தில் பாரதி நகரில் போட்டியிடும் தி. மு. க. வேட்பாளர் திராவிடமணி அந்தத் தொகுதியில் ஏற்கனவே சட்டமன்ற உறுப்பினராக இருந்தவர். ஆந்திராவைப் பொறுத்தவரையில் தெற்கு எல்லைப் பகுதியில் தி. மு. கவுக்குச் செல்வாக்கு இருக்கிறது. அப்பகுதி தமிழர் நலன்களுக்கு விரோதமான கட்சி வெற்றி பெற்றுவிடக்கூடாது என்ற நிலையில் ஆந்திராவில் இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவு அளித்துள்ளோம். பாண்டிச்சேரி கூட்டணி அரசு, எந்த வித பாதிப்பும் இல்லாமல் எந்த லட்சியத்துக்காக உறுப்பினர் தேர்ந்தெடுக்கப் பட்டனரோ அந்தப் பாதையில் செல்கிறது. ஆக நாங்கள் தெளிவாகவே இருக்கிறோம்.''

மணி விழாவில் பேசும்போது, தமிழர்களின் நலத்தையும், தமிழ் மொழியையும் காப்பாற்றுபவர் பக்கம்தான் கடைசிவரை இருப்பேன் என்றுகூறியிருக்கிறீர்கள். தமிழ் அறிஞர்களுக்குப் பல விழாக்கள் எடுத்து, உலகத் தமிழ் மாநாடு நடத்தி, பாரதியார் நூற்றாண்டு விழாவையும் சிறப்பாக நடத்தியது தமிழக முதல்வரது தமிழ்ப்பற்றைக் காட்டவில்லையா?

''எம். ஜி. ஆர். அவர்கள் முதல்வராக இருப்பதால்தான் பல தமிழ் அறிஞர்களுக்கு விழா எடுக்க வேண்டிய நிலையில் அவர் இருக்கிறார். அறிஞர்களுக்கு விழா எடுக்கிறார்என்பதால் அவருக்குத் தமிழ்ப் பற்று இருக்கிறது என்று கூறிவிட முடியுமா? தமிழ்ப் பற்று என்றால் அது மனத்திலிருந்து வரவேண்டும். இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின்போது எங்கேயோ சென்று விட்டவர்தானே! கேட்டால் அண்ணா அனுமதி பெற்றேன் என்பார். அனுமதி கேட்டால் கொடுக்காமல் கட்டாயப்படுத்தி போராட்டத்தில் ஈடுபடச் செய்ய முடியுமா? இவரது தமிழ்ப்பற்றை நான் நம்பத் தயாராக இல்லை.''

1972ல் அ. தி. மு. க. உதயமானதிலிருந்து நடக்கும் இடைத் தேர்தல்களிலும் பொதுத் தேர்தல்களிலும் (1980 நாடாளு மன்றத் தேர்தல் தவிர) தி. மு. க. தொடர்ந்து தோல்வியை தழுவக் காரணம் என்ன?

''நமது தேர்தல்களில் 60 சதவீதத்தினர் பாமர மக்கள் ஓட்டுப் போடுகிறார்கள். ஆக வெற்றியை நிர்ணயிக்கக் கூடிய நிலையில் இவர்கள் இருக்கிறார்கள். அந்த மக்களுக்கு இன்னும் எம். ஜி. ஆர். மீது ஏற்பட்ட சினிமா கவர்ச்சி என்ற மாயை இருக்கிறது. இந்த மாயை மெல்ல உடைக்கப்பட்டு வருகிறது. பெரியகுளத்தில் பணம், பதவி ஆகியவற்றை வைத்துக் கொண்டு அவர்கள்பெற்ற ஓட்டும், வெறும் உழைப்பினால் நாங்கள் பெற்ற ஓட்டுக்களும் எங்களுக்கு மக்கள் ஆதரவு கூடி வருகிறது என்பதை உணர்த்துகின்றன. 1980ல் சட்ட மன்றத் தேர்தலில் அவர் வெற்றி பெற்றதற்குக் காரணம் மக்களின் அனுதாபம்தான். மேலும் எங்கள் கூட்டணி கட்சியைச் சேர்ந்தவர்களே எங்கள் வேட்பாளர்கள் தோற்பதற்குக் காரணமாக இருந்தார்கள்.''

அன்று எம். ஜி. ஆர். வெளியேறக் காரணமாக இருந்தவர்களில் 90 சதவீத நபர்கள் இன்று எம். ஜி. ஆருடன்தானே இருக்கிறார்கள்? ஆகவே இன்றைக்கு அ. தி. மு. க. என்ற பெயரில் தி. மு. க. தான் ஆட்சி செலுத்திக் கொண்டிருக்கிறது என்று சொன்னால் தவறில்லை அல்லவா?



''அன்று அவர் வெளியேறக் காரணமாக இருந்தவர்கள் இன்று எம். ஜி. ஆருடன் இருக்கிறார்கள் என்பதால் அ. தி. மு. க., தி. மு. க. வாக ஆகிவிடாது. தி. மு. க. விற்குகொள்கையும் லட்சியங்களும் உண்டு. பதவி கிடைக்கும் என்று சென்றவர்களை வைத்துக் கொண்டு அ. தி. மு. க. வை தி. மு. க. என்று சொல்வது அர்த்தமற்றது. அன்று எம். ஜி. ஆர். விலகக் கையெழுத்துப் போட்டவர்கள் இன்று அ. தி. மு. க. வில் எத்தகைய நிலையில் வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை நீங்கள் அறிந்தால் அவர்களுக்காகப்பரிதாபப்படுவீர்கள்.''

சமீபத்தில் நடைபெற்ற சென்னை மாவட்ட தி. மு. க. நிர்வாகிகள்தேர்தலில் கலைஞர் அவர்கள் ஆர். டி. சீதாபதி தேர்ந்தெடுக்கப்படக் கூடாது என்று திட்டமிட்டு செயல்பட்டதாகச் சொல்லப்படுகிறதே!

''ஏற்றுக்கொள்வதற்கில்லை. எந்த ஒரு பொறுப்புக்கு வருகிறவரைப் பற்றியும் கட்சித் தலைமைக்கு நம்பிக்கை வைக்க முடியாத நிலை ஏற்பட்டால் அவர் தோல்வியைத் தழுவுவது அரசியல் கட்சிகளில் நடந்து வந்துதான் இருக்கிறது. இப்போது வெளியேறியிருப்பவர்கள் ஏற்கனவே தலைமை ஆதரவுடன் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்தானே. அப்போது தோற்றவர்கள் கட்சியை விட்டு ஓடவில்லையே! அ. தி. மு. க. வில் மாவட்ட தேர்தல் நடத்தப்பட்டு, முடிவு தெரிந்தும், முடிவுகள் வெளியிடப் படாமலேயே இருக்கின்றனவே. தேர்ந்தெடுக்கப்பட்டபோது தலைவரைப் புகழ்ந்து போற்றுவதும், தோற்றுவிட்டபோது தலைமையைக் குறை சொல்வதும் சகஜமாகி விட்டது. ஆனால் எதிர்க்கட்சிகளுக்குச் சென்று தி.மு.க. தலைமையை விமர்சிப்பவர்கள் அவ்வாறு விமர்சிக்கும் தகுதியை இழந்து விட்டார்கள் என்பேன்.''

கட்சியை விட்டு யார் சென்றாலும் கருணாநிதி அவர்களுடன் கடைசிவரை தாங்கள் இருப்பீர்கள் என்று உறுதியாகக் கூற முடியுமா?

''தி. மு. க. கொள்கை என் கொள்கை. தந்தை பெரியார், அறிஞர் அண்ணா அவர்களது கொள்கைகள், லட்சியங்கள் காப்பாற்றப்பட வேண்டுமானால் அதற்கேற்ற அமைப்பாக இருப்பது தி. மு. க. ஒன்றுதான். பல பிரச்னைகளில் ஜனநாயக முறைப்படி கலந்து பேசி, பெரும்பாலோரின் கருத்துப்படி முடிவெடுக்கும் தலைமை தி.மு. க.வுடையது. எதிர்காலத்தில் தமிழரின் பெருமையையும் தமிழர்களின் தரத்தையும் உயர்த்தப்போவது கலைஞர் தலைமையிலான தி.மு.க. ஒன்றுதான் என்பது என் அசைக்க முடியாத நம்பிக்கை. தி. மு. க.வுக்கு சமமாக நன்மை பயக்கக் கூடிய கட்சி வேறு எந்தக் கட்சியும் இல்லை. ஆக, உங்கள் கேள்விக்கு அவசியமே இல்லை.''

பேட்டி: **ப்ரியன்**

---

## கோழி கூவுது

**வே**லை வெட்டி இல்லாத பிரபு, முறைப் பெண்ணைக் கைப்பிடிக்கும் வேளையில் ஊரார் அவரைத் 'தண்டச் சோறு' என்று திட்ட, ரோஷம் வந்து பட்டாளத்தில் சேர்ந்த பிறகு கதை மெல்ல நகர்கிறது. அவர் ஊரை விட்டுப் போன பிறகு அந்தப் பெண் போஸ்ட் மேனைக் காதலிக்கிறாள். பட்டாளத்திலிருந்து திரும்பிய பிரபுக்கு இது தெரிந்துபோய்ச் சீறி எழுகிறார். அதே சமயம் அதே ஊரில் கொட்டாங்குச்சி பிடில் விற்கும் சிலுக்கு பிரபுவுக்காகவே ஏங்கிக் கொண்டிருக்கிறாள். கிளைமாக்ஸில் அவரவர்கள் காதல் நிறைவேறுகிற மாதிரி கதையை முடித்திருக்கிறார் கங்கை அமரன். டைரக்ஷனும் அவரே.

பிரபுவுக்கு இது ஏழாவது படமோ எட்டாவதோதான். அதற்குள் சுறுசுறுவென நடிப்பில் முன்னேறிவிட்டார். அப்பாவை அப்படியே பேச்சில் உரித்துக் காட்டுகிறார். பட்டாளத்துக்காரன் வேடத்தில் வரும்போது தோற்றம் அசல்!

புது முகம் விஜியிடம் கொஞ்சம் ராதாவின் சாயல் தெரிகிறது. நடிப்பு பூஜ்யம் என இவரைக் குற்றம் கூறுவதை விட இவரை டைரக்டர் நடிக்க வைக்கவில்லை எனக் கூறுவதுதான் பொருத்தம். கதாநாயகியை ஓரம் கட்டிவிட்டு 'பருமப் பெண்' பிந்து கோஷைக் காமிராவுக்குக் கொண்டு வநவதில் கவனம் செலுத்தியதில் ஏற்பட்ட கோளாறு.

படத்தில் 'அலைகள் ஓய்வதில்லை' பாதிப்பு பல இடங்களில் தெரிகிறது.

விஜி தபால்காரரை மாமனுக்குக் காதல் கடிதம் எழுதுவது போல் எழுதச் சொல்லி விட்டு, எழுதி முடித்ததும் 'இந்தக் கடுதாசி உங்களுக்குத்தான்' என்கிறாரே... அந்த இடம் டைரக்டருக்கு வெற்றி.

இளையராஜா இசையில் அனைத்தும் இனிமையாகத்தெரிந்தாலும் அந்த 'அண்ணே அண்ணே' பாட்டுதான் ஜனரஞ்சகம்.

தனித் தனியாகப் பல காட்சிகளை ரசிக்க முடிந்த அளவு படம் முழுவதையும் ரசிக்க முடியவில்லையே!

**- நிரைஞானி**



5

சீஃப் டாக்டர் மோகன் வந்து என்ன நடந்ததென்று கேட்டார். சிவகுரு, டிரைவர், முத்து இரண்டு பேரையும் அறையை விட்டு வெளியே போகச் சொல்லிவிட்டு டாக்டரிடம் நடந்த விஷயத்தில் எதைச் சொல்ல வேண்டுமோ அதைச்சொல்லி மறைக்கவேண்டியதை மறைத்தார்.

சமையல்காரப் பெண் சமையல் சரியாகச் செய்யவில்லை என்று தாம்கோபித்துக் கொண்டதாகவும், அதனால் கோபம் கொண்ட அவள் மிளகாய்ப் பொடியைத் தம் கண்களில் வீசிவிட்டு ஓடிவிட்டதாகவும் சொன்னார்.

டாக்டர் மோகன் தமக்குள்ளாகவே சிரித்துக்கொண்டார். சிவகுருவின் பெண் சபலத்தை அவர் அறியாதவரல்ல. எனவே அவர் விஷயத்தை ஊகித்துக் கொண்டு விட்டார். சிவகுரு அவளிடம் வாலாட்டியிருக்க வேண்டும். அதனால் வந்த வினைதான் இது என்பதைத் தெரிந்து கொண்டு விட்டார். இருந்தாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல் தாம் கையுடன் கொண்டு வந்திருந்த சொல்யூஷனைப் போட்டு அவர் கண்களை நன்றாகக் கழுவிச் சுத்தம் செய்துவிட்டு, சில மருந்துகளையும் போட்டுவிட்டு, ''இனிப் பயப்படறதுக்கு ஒண்ணும் இல்லே. நாளைக்குச் சரியாயிடும்'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

டாக்டர் சென்ற பத்து நிமிடங்களுக்கெல்லாம் தொலைபேசி மணி அடித்தது.

சிவகுரு ஆர்வத்துடனும் படபடப்புடனும் எழுந்து சென்று (இப்போது கண்களைக்கொஞ்சம் திறக்க முடிந்திருந்தது) தொலை பேசியின் ஒலி வாங்கியை எடுத்துக் காதில் வைத்துக் கொண்டு, ''ஹலோ... சிவகுரு பேசறேன்'' என்றார்.

''என்னங்க... நான்தான் உமா பேசறேன். கனெக்ஷன் கட்டாயிப் போச்சு. அப்புறம் கிடைக்கவே இல்லே. டயல் பண்ணிப் பண்ணி விரலெல்லாம் நோவுது.''

''சரி. என்ன சங்கதி சொல்லு. என்னமோ அக்கிரமம்னு ஏதோ சொன்னியே? விஜயா நல்லா இருக்குதுல்லே?''

''நல்ல வேளைங்க. கடவுள்தான் காப்பாத்துனாரு. நம்ம சமையல்கார அய்யரு தான் கடவுளா இருந்து இன்னிக்கு விஜயாவைக் காப்பாத்தினாரு. அவரில்லாட்டி என்ன ஆயிருக்குமோ.''

''என்ன நடந்துச்சுன்னு சீக்கிரம் சொல்லு உமா. அதைச் சொல்லாம டைம் வேஸ்ட் பண்ணிக்கிட்டிருக்கியே!''

''எப்படிங்க சொல்றது அதை? சொல்லாம இருக்கவும் முடியல்லே. சாயங்காலம் நாலு மணிக்குப் பட்டப் பகல்லே இந்த மாதிரி அக்கிரமம் நடக்குதே இந்த பங்களாவிலே. மாப்பிள்ளை ஆபீஸ்லேருந்து வந்திருக்கல்லே. நான் ரெண்டாவது மாடில இருக்கறவங்களோட பேசறதுக்காகப் போயிருந்தேன். அங்க நம்ம ராபின் ஆளுங்கதான் இருக்காங்க. அப்பப் பார்த்து எவனோ மூணாவது மாடி ஏறி வந்து நம்ம வீட்டுக்குள்ள பூந்துட்டிருக்கான்...''

''அய்யர் எங்கே போனாரு?''

''அய்யரு கீழே போய்ப் புகையிலை வாங்கியாரப் போயிருக்காருங்க. புகையிலை வாங்கிட்டுத் திரும்பி வர்றப்ப நம்ம வீட்டுக்குள்ள அந்த ஆள் போறதைப் பார்த்திருக்காரு. தெரிஞ்ச ஆள் இல்லே. அந்த ஆள் உள்ளே போய்க் கதவைச் சாத்தறதைப் பார்த்ததும் அய்யருக்குச் சந்தேகம் வந்து ஓடிப்போய்த் தடுக்கறதுக்குள்ளே அவன் உள்ளே போயிட்டான். அய்யர் உடனே ரெண்டாவதுமாடிக்கு ஓடிவந்து பால்கனிக்குப் போயி எப்படியோ அங்கிருந்து ஜன்னல்ல காலை வெச்சி மூணாவது மாடி பால்கனியிலே குதிச்சு நம்ம வீட்டுக்குள்ளே போய் அவனைப் பிடிச்சுட்டாரு.. அதுக்குள்ள அவன் விஜயா வாய்ல துணியை அடைச்சிட்டு, ரவிக்கையைக் கிழிச்சிட்டு... ஏங் கேக்கறீங்க. அவன் திருடன் இல்லீங்க. நம்ம விஜயாவைக் கெடுக்கிறதுக்காகவே வந்திருக்கான். அய்யருக்கும் அவனுக்கும் கை கலப்பு நடந்திச்சு. ஆனா எப்படியோ அவன் தப்பிச்சுஓடிட்டானுங்க. அய்யருக்குப் பாவம் கைலநல்லஅடி. வலதுகை வீங்கிகிட்டிருக்கு. ஃப்ராக்சர் ஒண்ணும் இல்லே. சரியாய்ப் போயிடும்னிருகு டாக்டர். அய்யர் மாத்திரம் இன்னும் கொஞ்ச நேரத்துக்குப் புகையிலைக் கடையில பேசிக்கிட்டு நின்னுட்டிருந்திருந்தா அந்தப் பாவி விஜயாவை....'' என்று உமா அழத் தொடங்கினாள்.

''அழாதே உமா. இப்பத்தான் ஒண்ணும் ஆகல்லியே. சரி. பாக்கி யெல்லாம் நேர்ல பேசிக்கலாம். வெச்சுடு. வேறொண்ணும் விஷயமில்லியே?''

''இல்லீங்க. இதைச் சொல்றதுக்காகத்தான் கூப்பிட்டேன். என் மனசு கேக்கலீங்க. வெச்சுடறேன்'' என்று உமா தொலைபேசியை வைத்து விட்டாள்.

தொலைபேசியிலிருந்து திரும்பி வந்து படுக்கையில் படுத்த சிவகுருவுக்கு அடித்துப் போட்டாற் போல இருந்தது.

தான் ராஜத்திடம் வரம்பு மீறி அக்கிரமமாக நடந்து கொண்ட அதே நேரத்தில் தன் மகளை யாரோ பலாத்காரம் செய்ய முயன்றிருக்கிறான். ஆனால் தாம் யாரிடம் மிருகத்தனமாக நடந்து கொள்ள முயன்றாரோ, அவளுடைய தகப்பனாரே தம் மகளைக் காப்பாற்றி யிருக்கிறார்.

அய்யர் மட்டும் விஜயாவை அந்த ஆபத்திலிருந்து காப்பாற்றாமலிருந்திருந்தால் அதன் விளைவு என்னவாயிருந்திருக்கும்? நினைத்துப் பார்க்கவே முடியவில்லை அவரால். விஜயா மிகவும் நுட்பமான மனசு படைத்தவள் என்பதை சிவகுரு அறிவார். இந்தத் தாக்குதல் அவள் மனத்தை எவ்வளவு தூரம் பாதித்

திருக்குமோ என்று பயந்தார். தம் ஒரே மகளான விஜயாவுக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் அவரால் அதைப் பொறுத்துக் கொள்ளவே முடியாது.

முத்து அறைக்குள் நுழைந்து ''சாப்பாடு அப்படியே இருக்குங்களே. சாப்பிடலையா?'' என்று கேட்டான்.

''வேண்டாம். எல்லாத்தையும் எடுத்துக் கிட்டுப் போயிடு'' என்றார்.

அவன் அவைகளை ஒவ்வொன்றாகஅப்புறப் படுத்திக் கொண்டிருந்தான்.

''முத்து!''

''ஐயா!''

''அந்த சமையல்காரப் பொண்ணை நான் ஏதோ கோபிச்சுக்கிட்டேங்கிறதுனால அவ எங் கண்ணுல மிளகாப் பொடியைத்தூவிட்டு ஓடிட்டா. பைத்தியக்காரப் பொண்ணு. நாளைக்கு வருவாளோ மாட்டாளோ தெரியல்லே. ஆறு உனக்கும் சொல்லி வைக்கிறேன். டிரைவர் கிட்டயும் சொல்லிவையி. இப்படி நடந்ததுன்னு நீங்க யாரும் வாயைத் திறக்கக் கூடாது. இது தெரிஞ்சா அய்யர் ரொம்ப மனசு கஷ்டப்படுவாரு. அந்தப் பொண்ணைப் போட்டு அடிச்சுக் கொன்னுடு வாரு. யார் கிட்டயும் சொல்லாதீங்கோ. அம்மா கிட்டேயோ விஜயா கிட்டயோ சொன்னீங்கன்னுக் கூட விஷயம் மெதுவா வெளியே தெரிஞ்சுடும். ஜாக்கிரதை. நீங்க யாராவது இந்த விஷயத்தைப் பற்றி வெளியே சொன்னீங்கன்னு தெரிஞ்சதோ அப்புறம் உங்களுக்கு இந்த வீட்ல வேலை கிடையாது.''

''சரிங்க ஐயா.''

முத்து போய்விட்டான்.

சிவகுருவுக்குப் படுக்கையில் இருப்புக் கொள்ளவில்லை.

முத்துவின் வாயையும் டிரைவரின் வாயையும் அடைத்து விட்டால் போதுமா? ராஜம்



பேசாமலிருப்பாளா? அப்பரிடமோ, உமாவிடமோ சொல்லிவிட மாட்டாளா? அய்யருக்கு விஷயம் தெரிந்து விட்டால் பிறகு தான் எப்படி அவருக்குத் தன்முகத்தைக் காட்ட முடியும்?

'உன் மகளையொருத்தனிடமிருந்து நான் காப்பாற்றினேனே. அதற்குப் பிரதியுபகாரமா இது?' என்று கேட்டால் என்ன பதில் சொல்ல முடியும்?

'கல்யாணம் பண்ணி வைக்கிறேன், வேலை வாங்கித் தரேன்னெல்லாம் சொல்லிட்டுக் கடைசில இந்த வேலை பண்ணிட்டீங்களே?' என்று நடராஜய்யர் ஒரு கேள்வியைக் கேட்டு விட்டால்?

'உங்களை நம்பி அவளை இங்கே விட்டுட்டுப் போனதுக்கு நீங்க இப்படியா பண்றது? உங்க மகளைப் போல இருக்கிற அவ கிட்ட இந்த மாதிரி நடந்துக்கிறதுக்கு உங்களுக்கு எப்படி மனசு வந்தது?' என்று உமா கேட்டால் அவளுக்கு என்ன பதில் சொல்வது?

இப்படிப் பலவாறாக எண்ணி மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்தபோது அவருக்குத் திடீரென்று இன்னொரு பயம் தோன்றியது.

இந்த ராஜம் குடுகுடுவென்று ஓடிப்போய்த் தான் தொட்டு விட்டதனாலேயே அவள் மானம் போய்விட்டதாக நினைத்துக்கொண்டு எதையாவது கடுதாசி எழுதி வைத்துவிட்டுச் செத்துக் கித்துத் தொலைந்து விட்டாள் என்றால்? விபரீதமாகப் போய்விடுமே? அப்புறம் தான் வீட்டிலும் இருக்க முடியாது. வெளியிலும் தலைகாட்ட முடியாதே.

மண்டையே வெடித்து விடும் போல இருந்தது. இந்த இக்கட்டிலிருந்து எப்படித் தப்புவது என்று ஒரு வழியும் புலப்படவில்லை. காசை விசிறியெறிந்தால் அவர் படுக்கைக்குத் தாவி வருவதற்கு எத்தனையோ பெண்கள் தயாராக இருக்கும்போது இந்தப் பெண்ணிடம் மனத்தை ஓட விட்டு இப்படி மாட்டிக்கொண்டோமே என்று தம் பேரிலேயே அவருக்குக் கோபமும் வெறுப்பும் தோன்றியது.

'சரி, வருவது வரட்டும், பார்த்துக்கொள்வோம்' என்று மனத்தை ஒருவாறாகச் சமாதானப்படுத்திக் கொண்டு தூங்க முயன்றார்.

டில்லியிலிருந்து உமாவும் நடராஜ அய்யரும் விஜயாவும் திரும்பி வந்து மூன்று நாட்களுக்குப் புயல் ஒன்றும் கிளம்பாமலிருக்கவே சிவகுருவுக்குச் சிறிது தைரியம் வந்தது. ராஜம் நடந்த விஷயம் எதையும் தன் தகப்பனாரிடம் சொல்லியிருக்கமாட்டாள் என்று அவருக்குத் தோன்றியது. ஆனாலும் நிச்சயமாக அப்படியும் எண்ணிக்கொண்டு விட முடியாது. ராஜம் விஷயத்தைச் சொல்லியிருந்து அய்யர்தான் அதை வெளியில் விடுவது ராஜத்துக்குக் கெடுதலாக முடியும் என்ற எண்ணத்தில் பேசாமல் இருக்கக் கூடும் என்று நினைக்கவும் இடம் இருக்கிறது. அல்லது ராஜம் விஷயத்தைப் போட்டு உடைப்பதற்குச் சரியான வேளை வரட்டும். டில்லியிலிருந்து, அப்பா வந்ததும் வராததுமாகக் கலாட்டாவேண்டாம் என்று இருக்கிறாளோ என்னவோ? நடராஜ அய்யர் திரும்பி வந்த பிறகு ராஜம் சிவகுருவின் வீட்டிற்கு வரவில்லை. ஏன், அந்தச் சம்பவம் நடந்த அன்றிலிருந்தே அவள் அங்கே வருவதை நிறுத்தி விட்டிருந்தாள். இரண்டு நாட்கள் சிவகுரு ஹோட்டலில்தான் சாப்பிட வேண்டியதாயிற்று.

நடராஜய்யர், வந்ததும் சிவகுருவை விசாரித்தார். ''ராஜம் சமையல் எல்லாம் சரியாகச் செய்து போட்டாளா? வாய்க்கு ருசியாக இருந்ததா? நேரத்திற்கு வந்துகொண்டிருந்தாளா?'' என்றெல்லாம். எல்லாவற்றுக்கும் சிவகுரு பட்டும் படாமலும் ஏதோ பதில் சொல்லி வைத்தார். இரண்டு நாட்கள் அவள் வராததைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை.

எந்த நேரத்தில் என்ன கிளம்புமோ, எதை எதிர்க்க வேண்டியிருக்குமோ என்ற நிம்மதியற்ற நிலைமையில் சிவகுரு தமது காரியாலய வேலைகளில் மிகவும் 'பிஸி'யாக இருப்பது போன்று காட்டிக் கொண்டு வீட்டில் அதிகமாக யாருடனும் — மகள் விஜயாவுடனும் கூட — பேசாமல் காலத்தை ஓட்டினார்.

“நடராஜய்யரா, வாங்கோ. சௌக்யமா? டில்லி ட்ரிப்பெல்லாம் எப்படி இருந்தது?'' என்று வரவேற்றார் டாக்டர் மோகன்.

''சௌக்கியம்தான். இந்த வலது கண்ணிலதான் ரெண்டு நாளா ஒரே அரிப்பு. அதுக்கு ஏதோ ஆயின்ட்மென்டோ மருந்தோ கொடுத்தா தேவலை.''

''கொடுக்கிறேன். உக்காருங்கோ. டில்லி ட்ரிப் எப்படி இருந்ததுன்னு கேட்டேனே சொல்லலியே?''

**யார்?**

'இப்போது என்னை முதுபெரும் எழுத்தாளன்' என்கிறார்கள். 'கமர்ஷியல் எழுத்தாளன்' என்கிறார்கள்; 'காசுக்காக எழுதுகிறேன்' என்கிறார்கள்; 'எதற்காக எழுதுகிறேன் என்று தெரியாமல் எழுதுகிறேன்' என்கிறார்கள்; 'சுமாராக எழுதுகிறேன்' என்கிறார்கள் 'எழுதுகிறார்' என்கிறார்கள். இந்தக் கடைசி ஒரு சொல் விமர்சனம் எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது'' இப்படிச் சொல்லும் எழுத்தாளர் யார்?

சுஜாதா.
நன்றி: கணையாழியின் கடைசிப் பக்கங்கள்
-செளம்யா



# உங்கள் வருங்காலம், பாதுகாப்புச் சிகரமாக விளங்க வேண்டுமா அல்லது கனவுக் கோபுரமாக இருக்க வேண்டுமா?

நீங்கள் பொதுத்துறை வங்கியில் சேமித்தால் உங்கள் பணம் பாதுகாப்பாக இருக்கிறது. உங்களுக்குத் தேவைப்படும்போது அது உதவுகிறது. பாதுகாப்பு மட்டும் நன்மையல்ல, அத்துடன் உங்கள் முதலீட்டின் மீது கிடைக்கும் ஆதாயம் மார்க்கெட் ஏற்ற இறக்கங்களினால் பாதிக்கப்படுவதில்லை.

ஆதாயத்தோடு பாதுகாப்பு, பணம் தேவைப்படும்போது கிடைக்கும் நன்மை எந்தக் கோணத்தில் பார்த்தாலும் பாங்கில் டெபாசிட் செய்வது மிகவும் நன்மை அளிப்பதாகும்.

அதனால்தான் உங்கள் பணம் பாங்கில் இருக்க வேண்டும்.

பாங்க் டெபாசிட் பலவித நன்மைகளை அளிக்கிறது. - உங்களுக்கு நிச்சயமான ஆதாயம் கிடைக்கிறது. வட்டி விகிதம் 10% ஆக இருந்த போதிலும் சில விசேஷ திட்டங்களின் கீழ், கிடைக்கும் ஆதாயம் 19.6% ஆகக்கூட உயர்ந்திருக்கும். வரிச் சலுகைகள் உங்களுக்குக் கிடைக்கின்றன. ரூ. 6000/- வரை கிடைக்கும் வட்டிக்கு வருமானவரி கிடையாது.

பலவிதமான இதர பணிச் சேவைகளையும் வசதிகளையும் நீங்கள் பயன்படுத்திக் கொள்ளலாம்.

உங்களுக்குக் கிடைக்கும் வெவ்வேறு திட்டங்களைப் பற்றி அறிய அருகிலுள்ள பொதுத் துறை வங்கிக்கு விஜயம் செய்யுங்கள்.



ஜாயின்ட் பப்ளிசிட்டி கமிட்டி
பப்ளிக் செக்டர் பாங்குகள்

**பப்ளிக் செக்டர் பாங்குகள்**

- எங்கிருந்தாலும் என்றும் உங்கள் வாழ்வோடு இணைந்தவை.

Imageads-JPC-82369 TAM

''நான் டில்லிக்குப் போயிருந்தது உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று ஆச்சரியப்பட்டார் நடராஜய்யர்.

''உங்க சிவகுருதான் சொன்னார்.''

''க்ளப்ல பார்த்தீங்களா?''

''இல்லே. அவர் வீட்டுக்கே போயிருந்தேனே. எல்லாம் உம்ம பொண்ணோட கைங்கரியம்'' என்று டாக்டர் சிரித்தார்.

நடராஜய்யர் ஒன்றும் புரியாமல் விழித்தார்.

''என் பொண்ணு? அவ என்ன பண்ணு?''

''உமக்கு விஷயமே தெரியாதா? நீர் இவ்வளவு சாதுவா இருக்கீர்! உம்ம பொண்ணுக்கு எங்கிருந்தய்யா அவ்வளவு கோபம் வந்தது?'' டாக்டருக்குச் சிரிப்புத் தாங்கவில்லை.

''டாக்டர்! நீங்க என்ன சொல்றீங்க? ராஜம் என்ன பண்ணினா?''

''சிவகுரு அவளை ஏதோ கோபிச்சுண்டாராம். அது எதுக்காகன்னு எனக்குத் தெரியாது. உடனே உம்ம பொண்ணு மிளகாப் பொடியை வாரி அவர் கண்ணுல எறச்சிட்டு ஓடிட்டா. மனுஷன் தவிச்சுப்போயிட்டார்.''

நடராஜய்யருக்கு யாரோ தன் கண்களில் இப்போது மிளகாய்ப் பொடியைத் தூவி விட்டது போல இருந்தது.

அவசர அவசரமாக டாக்டரிடம் மருந்து போட்டுக் கொண்டு வீட்டுக்கு ஓட்டமும் நடையுமாக வந்தார்.

''ராஜம்!'' என்று கர்ஜித்துக்கொண்டே வீட்டுக்குள் நுழைந்தார்.

சமையலறைக்குள் வேலையாயிருந்த ராஜம், அப்பாவின் அசாதாரணமான அந்த அலறலைக் கேட்டு என்னவோ ஏதோ என்று பயந்து வெளியே ஓடிவந்தாள்.

அவர் மனைவியும், மற்ற குழந்தைகளும் கூட அவர் முன்னால் வந்து நின்றுகொண்டு விட்டனர்.

''என்னடி பண்ணிட்டு வந்தே நீ எஜமான் வீட்ல?'' என்று இரைந்தார்.

ராஜம் பதில் பேசாமல் தலையைக் குனிந்து கொண்டாள்.

''என்ன பண்ணினா? ஏன் உங்களுக்கு இந்தக் கோபம்?'' என்று அவர் மனைவி பயந்து கொண்டே கேட்டாள்.

''என்ன பண்ணினாளா? எவ்வளவு துணிச்சல் இவளுக்கு? சிவகுரு கண்ணுல மிளகாப் பொடியை விசிறியடிச்சுட்டு வந்தாளாம். டாக்டர் மோகன் சொன்னார்.''

''ஐயையோ! எதுக்காகடி?''

''அப்படி அவர் உன்னை என்னடி சொல்லிட்டார்? அவர் சொல்லும்படியா நீ என்ன பண்ணினே? முப்பது வருஷமா அந்த வீட்டுச் சோத்தைத் திங்கறவங்கடி நாம? ஒரு வார்த்தை உன்னைத் திட்டறதுக்கு அவருக்கு உரிமை கிடையாதா? உனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கறேன்னு சொல்லியிருந்தார். எல்லாத்தையும் கெடுத்துக் குட்டிச்சுவராக்கிட்டியா? வாயைத் திறந்து பேசேன்டி. நன்றி விசுவாசம் இல்லாம நடந்துண்டுட்டியேடி. இதைப் பத்தி அவர் ஒரு வார்த்தை எங்கிட்டச் சொல்லலியே. உனக்கென்னடி வந்தது அவ்வளவு திமிர்?''

''திமிர் எனக்கில்லேப்பா. அவருக்குத்தான்.''

''பேசினியோ அறைஞ்சு பல்லையெல்லாம் உதுத்துடுவேன்.''

ராஜத்தின் தாய் குறுக்கிட்டாள். ''நடந்தது என்னன்னுதான் பொறுமையாக் கேளுங்களேன். ஏன் இப்படிக் கண் மண் தெரியாமக் குதிக்கிறேள்?''

ராஜம் அழத் தொடங்கினாள்.

''அழறதுக்கு உனக்கு என்ன ஆச்சு? உன்னைப் பெத்ததுக்கு நான்தான்டி அழணும். பெரிய மனுஷர். உன் அப்பா ஸ்தானத்துல இருக்கறவர் அவரைப் போயி...''

''அப்பா. போதும் நிறுத்துங்கோ. உங்க வாயை அலம்புங்கோ. அவர் பெரிய மனுஷன் இல்லே. ரொம்பச் சின்ன மனுஷன். அப்பா ஸ்தானத்துல இருக்கணும்னுதான் அவரும் பிரியப்பட்டாரு. ஆனா எனக்கில்லை. எனக்கொரு ஆண் குழந்தை பிறந்தா அதுக்கு.''

''என்னடி சொல்றே?''

''ஆமாப்பா. என்னைக் கல்யாணம் பண்ணிக்கணும்னாரு. நான் ஒத்துக்கலே. அப்படின்னா கல்யாணம் பண்ணிக்காமலே பொண்டாட்டியா இருங்கிற மாதிரி கையைப் பிடிச்சு இழுத்துட்டாரு. நான் அவர் கண்ணுல மிளகாப் பொடி தூவலேன்னா இன்னிக்குப் பரிசுத்தமானவளா உங்க முன்னாடி நின்னிருக்க முடியாதப்பா'' என்று கூறி நின்ற இடத்திலேயே உட்கார்ந்து முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு அழத் தொடங்கினாள்.

நடராஜய்யருக்கு இப்போது உடம்பெல்லாம் மிளகாயை அரைத்துப் பூசினாற்போல எரியத் தொடங்கியது. ''அட. துரோகி!'' என்று பல்லை நறநறவென்று கடித்தார்.

(தொடரும்)


தாதாதாதாதாதாதாதாதாதாக்குத்
தண்ணீர் தாரான்
ஆஆஆஆஆஆஆஆஆஆக்கும்
உதவான் கொள்ளை
லாலாலாலாலாலாலாலாலாலாக்குப்
பொருள் விற்பான்
பாபாபாபாபாபாபாபாபாபாக்கே
ஆனா வானே!

'மலரும் உள்ளம்' எனும் தொகுப்பில் அழ. வள்ளியப்பா பாடிய பாடல்!

புரியவில்லை? பத்து பத்து எழுத்துக்கள் இருப்பதைக் கவனித்தால் புரிந்துவிடுமே!

—எஸ். முல்லை மணாளன்

# நகைப் பொங்கல்




''ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்ல சக்கரையும் பாலும் டிகாக்‌ஷனும்தான் தனித்தனியா வைப்பாங்கன்னு பார்த்தா, கரும்பு சாறையும் வெறும் பொங்கல்லே பிழிஞ்சுக்கச் சொல்றீங்களே!''











''என்னப்பா இது?..... கோணல் மாணலா!... 'பட்டை' அடிச்சுட்டு வந்து பட்டை அடிக்கிறியா!''

''என்ன பிரமாதம்?... சிலுக்கு கிட்டே இருந்து பொங்கல் வாழ்த்து வந்துட்டா என்ன? எனக்குக் கூடத் தான் ரஜினி கிட்டேயிருந்து பொங்கல் வாழ்த்து வந்திருக்கு!''






''பெர்ர்ர்ரிய ஆர்ட்டிஸ்ட் நீங்க... ரெண்டு கோலம் போட்டுத் தாங்களேன்.''

''லைன் டிராயிங்கா... வாஷ் டிராயிங்கா?''




நெல்லைக் காளை அவன்
கல்லைப் பொங்கினான்!..
அது பொங்-கல் ஆயிற்று!

''ஏணி இல்லாததாலே உங்க புள்ளையை ஒட்டடை அடிக்க ஒத்தாசை பண்ணச் சொன்னேன்! அதுக்கு ஏன் இப்படி மொறைக்கிறீங்க?''





''என்ன பண்டாரம், பொங்கல் இனாமா?''

''இந்தக் கட்டைக்கு எதுக்குங்க பொங்கல் இனாம்? தாங்கி வழிகிற உங்களுக்கு ஒரு ஹெல்ப்! இப்படியே என்னைப் பட்டினத்தார் மாதிரி ஒரு போட்டோ... கலர் போட்டோ எடுங்க!''

# ...ன் மர நிழல்கள்

## சித்ரா ராமச்சந்திரன்

''அம்மாவாம் அம்மா...பத்து மாசம் ஒவ்வொண்ணையும் சுமந்து பெத்தவ நான். நேத்து வந்தவ இதுகளுக்கு ஒத்தியாப் போயிட்டா. எல்லாம் என் தலையெழுத்து. இந்த மனுஷன்தான் லெவஸ்தை கெட்டுக் கூட்டிண்டு வந்தானே, இதுகள் அப்பனுக்கு மேல் பிள்ளைகளா 'அம்மா அம்மா'ன்னு உருகிப்போறதுகள்....''

''இப்போ என்ன ஆயிடுத்துன்னு இந்தக் கூத்தடிக்கிறே?'', ரமணிக்குச் சுருக்கென்று கோபம் ஏறத் துவங்க, மெல்லிய குரலில் முணுமுணுத்தான்.

பத்து மாதம் சுமந்து பெத்தவள்தான். ஆனால் பேசத் தெரிந்த நாள் முதலாக அவளை, அப்பா, தாத்தா, பாட்டி எல்லோரும் அழைத்தது போலவே அவனும் 'சின்னம்மா' என்றுதான் அழைத்து வந்தான். தங்கைகளும் தம்பியும் அவனையே பின்பற்றினர். இப்போது திடீரென்று 'அம்மா' என்றழைக்க ஆரம்பித்தால், அன்னியரைக் கூப்பிடுவது போல இருக்காதோ? இதற்குப் போய் ஒரு கோபமா?

''என்னம்மா நீங்க... இவ இத்தனை கத்தி ஆர்ப்பாட்டம் செய்யறா... நீங்க பெரியவா தானே....ஒரு வார்த்தை அதட்டக்கூடாதா? எனக்கே நுனி நாக்கு வரைக்கும் வந்து வார்த்தை துடிக்கிறது...''

'எல்லாம் நான் இங்கு வந்து சேர்ந்ததாலோ?' என்ற சந்தேகம் சீதாலக்ஷ்மியைக் குடைந்தது.

அன்று கணக்குப்பிள்ளையும் தர்மகர்த்தாவும் வந்து கேட்டபோதே திடமாக மறுத்து விட்டிருந்தால்?

முதலில் அவர்கள் வேண்டுகோளில் ஏதும் அக்குறும்பு இருக்குமோ என்ற சந்தேகம் எழத்தான் செய்தது.

''அம்மா... நீங்க தயவு செய்யணும்மா... இந்தத் தடவை உத்சவம் தடபுடலா ஏற்பாடாகி இருக்கு.... ஏகப்பட்ட கலை நிகழ்ச்சிகள். முக்கிய விருந்தினரா ஏ. ஏ. ஆர். அவர்கள்... நாலு புஸ்தகத்தில் நம்ப ஊரையும் கோவிலையும் பத்தி வந்தா... கோவிலுக்கு ஒரு நல்லது நடக்குமேன்னுதான் இந்த ஏற்பாடெல்லாம்... அவருக்கு ஒரு பத்து நாளைக்கு உங்க வீட்டில தங்க எடம் கிடைச்சா... வேற ஒண்ணும் வேண்டாம். சுசிருசியா ஒரே ஒரு வேளைசாப்பாடு போட்டுட்டா எதேஷ்டம்...''

அவர்கள் முகமும் குரலும் உண்மையைத்தான் பேசின. அவள் தயக்கத்துடன் ஒப்புக்கொள்ளத் தயங்கித் தயங்கியே ஆரம்பித்த அந்த முதல் நாள்.இறக்கை கட்டிக்கொண்டது போல் பத்து நாட்களாகிப் பறந்து விட்டது.

வற்றல் குழம்பு, வேலிப் படலில் படர்ந்திருந்த பாகற்காய் வதக்கல், உதிர் உதிராகத் தேங்காய்த் துவையலும்...

அந்த எளிமையான உணவை அழகாக அளவாக அவர் சுவைத்த பாங்கைக் கண்டு அவள் உள்ளம் பனியாகக் குளிர்ந்தது.

அன்று அவர் கிளம்ப ஆயத்தம் செய்து கொண்டிருந்த வேளையில்தான் வண்டியோடு ரமணி வந்து சேர்ந்தான்.

''அம்மா... இங்கே தனியா இருந்து என்ன செய்யப் போறேள்... நீங்களும் எங்களோட பட்டணம் வரணும். எங்களோடவே தங்கணும்....''

அனுபவித்தறியாத ஒரு நிறைவு அவள் மனத்தை அமுத்தியது.

நெற்றியில் அகன்ற குங்குமப்பொட்டும் கன்னம் நிறைய மஞ்சளும், தொங்கத் தொங்க மாங்கல்யமும் — அவளுடைய சுமங்கலித்வத்துக்கு இந்தச் சான்றுகளைத் தந்தவனை அவள் ஒரு கணம் நினைத்தாள்.

அந்து.... மனம் அவனை மறக்கவில்லை. அவள் பிறந்தபோது—

''டேய்... உனக்குப் பெண்டாட்டி பிறந்திருக்கா பாருடா...'' என்று பாட்டி கேலியாக அழைக்க, ''இரு பாட்டி... கால் அலம்பிண்டு வரேன்'' என்ற ஆறு வயது அந்துவைப் பற்றி நெடு நாட்கள் வரை மற்றவர்கள் சொல்லிச் சொல்லிச் சிரிக்க...

அவள் கற்பனையில் உருவகப்படுத்திப் பார்த்துக் கொண்ட அந்த அந்துவின் முகம்..

அந்த நாட்களின் அந்துவின் முகங்கள்... எத்தனை எத்தனை கோணங்களில் அவன்நினைவு முகங்கள் அவள் மனத்தில் உறைந்துவிட்டன.

ஆனால் இத்தனை வருடங்களுக்குப் பின் திரும்பிப் பார்க்கும்போது அந்த நினைவுகள் மிக மிக அற்ப சொற்பமானவைதான் என்று புரிகிறது. ஒரு பால்ய நண்பனின் நினைவு போல, ஒரு பள்ளித் தோழனின் நினைவு போல மட்டும்தான் அந்து அவள் மனத்தில் இருந்தான். ஆனால் கணவனாக, ஒரு பொறுப்புள்ள வாழ்க்கைத் துணையாக... ஊஹூம். அந்தக் கோலத்தில் அவன் முகம் நினைவில்லையே....

''அம்மா... யோசிக்காம சரின்னு சொல்லுங்கோம்மா....'' ரமணியின் குரல் வற்புறுத்துகிறது.

வார்த்தையளவில் வெறும் சுமங்கலியாக வாழ்ந்து வந்தவள், ஆசை எனும் விலங்கு அவளைப் பூட்டிப் பிணைத்து இழுக்கத் துவங்க, தந்தையுடனும் மகனுடனும் பயணப்பட்டாள்.

உணர்ச்சிகளைக் காட்டாத, ஏன், முகமே அற்றுப்போன ஒரு பிராணி போலத்தான் அவளை எதிர்கொண்டாள் சின்னம்மா. சற்றே இறுக்கமாகக் கழிந்த முதல் நாளுக்குப் பின், எல்லாம் வெகு இயல்பாகி விட்டது. குழந்தைகள் அம்மா அம்மா என்று ஒட்டிக்கொண்டார்கள். அதே சமயம் சின்னம்மா அடிக்கொரு நோவும், நாளுக்கொரு நோக்காடும்




சொல்லிக் கைகழுவிவிட்ட வீட்டு வேலைகள் அனைத்தும் சீதாலட்சுமியிடம் ஒட்டிக்கொண்டன. மொத்தத்தில் அவள் அந்த வீட்டின் இன்றியமையாத பிரஜையாக கவிகரிக்கப் பட்ட பின்தான் ரோதனை ஆரம்பித்தது.

சின்னம்மாவின் நாவு விஷ அஸ்திரமாக, யார், எவர் என்ற பேத பாவமின்றி, அனைவரையும் தாக்க ஆரம்பித்தது.

''அம்மா....''

''என்ன...என்னப்பா ரமணி?''

''சக்கு சொல்லி அனுப்பியிருக்கா... குழந்தைக்கு ஜொரமாம்... நீங்க கூட இருந்தா ஒத்தாசையா இருக்குமாம்...''

''நான் கிளம்பறேன்... நீ ஆபீசுக்குப் போறப்பக் கொண்டு விட்டுடேன்... சின்னம்மா, நீயும் குளிச்சிட்டு வந்தா உனக்கும் சாதம் போட்டுட்டுப் போயிடறேன்...''

''நான் சாப்பிடவும் குளிக்கவும் கூட இன்னொருத்தர் சொல்ற நிலைக்கு வந்துட்டேனா என்ன? கொண்டவன் சரியில்லேன்னா கூரையும் தூத்துமாம். அந்த மனுஷனைக் கையிலே போட்டுண்டாச்சு. புள்ளையும் தோப்புக்கரணம் போடறான். பொண்ணையும் எனக்குப் பகையாக்கியாச்சு... பெத்தவனை. வீட்டுக்கு வராதேன்னு சொல்ற அளவுக்கு அவனுக்குப் போதனை பண்ணியாச்சு. சோறு ஒண்ணுதான் எனக்குக் குறைச்சல்...''

'அவள் சுபாவம்' என்று எத்தனை தேற்றிக் கொண்ட போதிலும் மனத்தை ஒரு வலி பிழிந்தெடுத்தது.

**''எ**ங்க வராம இருப்பளோன்னு நினைச்சேன்.. அம்மா ஒரு வேலை செய்ய விடாமை நைன்னு அழுதிட்டு இப்பத்தான் தூங்கறது. உங்களைப் பார்த்ததும்தான் அம்மா யானை பலம் வந்தது...'' கள்ளிச் சொட்டாகக் காப்பி, கனிரசச் சொட்டாக சக்குவின் அன்புவார்த்தைகள். சீதாலட்சுமி புன்னகைத்தாள்.

''சக்கு...நா ஒண்ணு சொன்னாக் கோச்சுக்க மாட்டியே...''

''.....''

''இத்தனை அன்பு ஆதாரவோட என் மூஞ்சியாவது சின்னம்மாவுக்குக் காட்டி இருக்கக் கூடாதா?''

''அம்மா... சின்னம்மா கிட்ட எங்களுக்கெல்லாம் அன்பில்லையா என்ன? ஆனா அவ நடந்துக்கறதும் பேசறதும் ஒண்ணும் நன்னா இல்லே....''

''சச்சு... சின்னம்மா எப்பவுமே இப்படித்தானா?''

''ம்... எப்பவுமே கொஞ்சம் கூர்மையான நாக்குத்தான். இப்பக் கொஞ்சம் அதிகமா விடுத்து.''

''அதாவது நான் வந்தப்புறமா?''

''என்னம்மா நீங்க? அதெல்லாம் ஒண்ணுமில்லே... அம்பது வயசு ஆகப் போறது. பருவக் கோளாறு. அவ்வளவுதான். அதை விடுங்கோ... நீங்க காது குத்துவேளாமே... நம்ம பாப்பாவுக்குக்கூட நீங்களுத்தணும்...''

''அதுக்கென்னசச்சு...ஜமாய்ச்சிடலாம்.''

பருவக் கோளாறு... சின்னம்மாவுக்குமா?

''ஊரும் ஒவ்வொரு பொண்ணும் பத்திலேயும் பன்னெண்டிலயும் குதிர்ந்து நிக்கறதுகள். இங்க பதினாறு ஆகியும் வழி பிறக்கல்லியே... இந்த வருஷமாவது எல்லாம் நல்லபடியாயிட்டா அந்தா விடுமுறையில் வரப்ப செய்யவேண்டிய சடங்குகளைச் செஞ்சு அவளைப் புக்காத்துக்கு அனுப்பணும்னு ஆசை... தெய்வம் கண் திறக்கணும்.''

அம்மாவின் . புலம்பல் வருடம் தவறாமல் ஒலித்தது. உற்றார் உறவினரின் விசாரிப்பு. அனுதாபம்.

அந்தா படிப்பை முடித்து வேலையிலும் அமர்ந்து விட்டான்.

''ஷ்...சத்தம் போடாதேடி... அவன் காதிலே விழப் போறது.''

அவள் காதுகள் இயல்பாகக் கூர்ந்து கேட்டன. ''ஐயோ... நம்ம குழந்தையோட கதி....''

''நானும் கெஞ்சிப் பார்த்தேன். இன்னும் ஒரே ஒரு வருஷம் காக்கலாம்னேன். அத்திம்பேர் கேக்கலே. 'என்னடா பிச்சு செய்யறது அந்தா வேலைக்குச் சேர்ந்தாச்சு... வயசும் நிறைய ஆயிடுத்து. பட்டணத்து நாகரிக சூழல்லே அவன் தனியா எத்தனை நாள் தாக்குப் பிடிக்க முடியும்? சீதாவுக்கும் பத்தொன்பது நிறையப் போறது. இன்னும் என்ன சொல்லு. பொண்ணைப் பெத்த எத்தனையோ பெரிய மனுஷா எல்லாம் பிடுங்கி எடுக்கறா. ஆனா சீதா என்னிக்கும் என் மாட்டுப் பொண்தான். ரொக்கம், நிலம், வீடு எல்லாம் எழுதி வெக்கத்தான் போறேன்'ங்கறார்.... அவர் சொல்றதும் நியாயம்தானேடி...''

அந்தாவுக்குக் கல்யாணம். அவளுடைய அந்தாவுக்குக் கல்யாணம்.

மண்டைக்குள் டமாரங்கள் இராப்பகலாக முழங்கின. இதயம் உலோகக் குழம்பாகக் கொதித்துக் கொதித்துக் கொந்தளித்தது.

''ஏன்னு...ஏன்னு....ஓடிவாங்களேன்... இல்லே...இல்லேஓடிப்போங்களேன்.. அந்தக் கல்யாணத்தை நிறுத்துங்களேன். என் பொண் மூளி இல்ல... மொட்டில கருக வேண்டியவ இல்ல.... அவ பெண்மை பூத்திட்டுதுன்னு... சீக்கிரமா ஏதாவது செய்யுங்கோன்னு... அந்தா அவளுக்குத்தான்... அவள்...'' வெறி பிடித்தவள் போல அம்மா அழுது, சிரித்து, கேவி, உணர்ச்சிக் கடலாகக் கொந்தளித்தாள்.

''இப்ப....இப்ப... முகூர்த்தச் சாப்பாடு முடிஞ்சிருக்கும் டீ......'' அப்பாவின் துக்கத்தை மேல் வஸ்திரம் தன்னில் புதைத்துக்கொண்டது.

ஊர் திரும்பிய அத்தையும் அத்திம்பேரும் அலையக் குலைய ஓடிவந்தார்கள். பட்டுப் புடவை, வெற்றிலை பாக்கு, பூ, பழம் என்ற சீர் சுமந்து வந்தவர்கள், நெஞ்சம் குறுகுறுக்க ஓடிவந்தார்கள். அவளைக் கண்டு கல்லாகி நின்றார்கள்.

''சச்சு... கொழந்தைக்குப் புதுசு எடுத்துக்கோ. காதுக்கும் தங்கத் திருகு வாங்கிக்கோ. அப்படியே அவளுக்கும் ஒரு ஜோடி தங்க வளை எடுத்துடு. இது நமக்குள்ளவே இருக்கட்டும்....''என்றார் அவர்.

சச்சு கொடுத்த புதுப் புடவையில், அந்தப் பொன் வளையல்களையும் அணிந்து கொண்டு பாயசப் பாத்திரத்தை ஏந்தி 'சீதா லக்ஷ்மி பரிமாறக் இளம்புன்கையில் வயதுக் கொவ்வாத ஒரு மனத் துள்ளலில் அவள் புல்லரித்துப் போனாள்.

ஏ. ஏ. ஆரின் இலையில் பாயசத்தை வைக்கையில் அவள் மனம் எக்காளமிட்டுக் குதித்தது. பதராகி விட்டதாக அவள் நினைத்திருந்த அவள் வாழ்க்கை அந்தக் கணத்தில் மனப் பிராந்தியத்தின் உன்னத ஐக்கியத்தில் இணைந்து முழுமை பெற்று விட்டது.

கண நேரம் நிமிர்ந்த அவர் கண்களில் ததும்பி நின்ற நேச பாவத்தில் முக்குளித்து அந்த லயிப்பில் அவள் அப்படியே நின்றாள்.

'தடார்' என்ற பெரும் சப்தத்துடன் அறைக் கதவைத் திறந்து கொண்டு, விடுபட்ட பூகமெனப் புயலாக வெளிப்பட்டாள் சின்ன

அமெரிக்காவில் உள்ள ஃபிளாரிடா மாநிலத்தில் பூனையை வளர்ப்பவர்கள் அதன் கழுத்தில் மணியைக் கட்ட வேண்டுமாம்! இல்லை யென்றால் 200 ரூபாய் அபராதம்.

ஊருக்குள் சுதந்திரமாய்த் திரியும் பறவைகளைப் பூனைகளிடமிருந்து பாதுகாக்க இந்த ஏற்பாடு!

விண்டம் — சேலம் தர்மசக்ரா





"செங்கதிர்த்தேவன் சிறந்த ஒளியினைத்
தேர்கின்றோம் — அவன்
எங்களறிவினைத் தூண்டி நடத்துக..."

— மகாகவி பாரதி

செங்கதிர் அழைத்திடும் தங்கப் பண்டிகையாம்
பொங்கலோ பொங்கல்! பொங்கும் மங்களம்
எங்கும் தங்கிட எங்கள் இதயங்கனிந்த

# நல்வாழ்த்துக்கள்!



**டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்**

சென்னை-600 001

சைக்கிள்கள், சைக்கிள் சீட்டுகள், செயின்கள், டைனமோ
லாம்ப் செட்டுகள், எஃகு குழாய்கள், எஃகு ஸ்டிரிப்புகள், மெட்டல்
செக்ஷன்கள் மற்றும் 'Z' பார்கள் தயாரிப்பாளர்கள்.

Imageads M-1700

''வரவர எதுக்கும் விவஸ்தையே இல்லா மல் போயிடுத்து. பொன் என்ன... பட் டென்ன... இந்த வயசில் இந்த மேனு மினுக்கித்தனம்... ஹூம். அப்பன் இல்லே, புள்ளே இல்லே, மாப்பிள்ளே இல்லே... எல் லாரையும் மடக்கிப் போட்டுண்டு... தூ... என்ன தேவடியாத்தனம்...''

அரவத்தின் ஆலகால அலகாக 'நக்நக்' என்று கொத்திப் பிடுங்கிய வார்த்தைகள்... அந்த நாராசமான தூ.... சீதாவின் மீது பட்டு ஏ. ஏ. ஆர்ரின் இலேயில் தெறித்து விட்டதோ?

அடிவயிற்றிலிருந்து திரண்டு பெருவெள்ள மாகப் பெருகி வந்த ஓர் இனம் தெரியாத உணர்வின் உந்தலைத் தாங்க மாட்டாமல் வீறிட்டாள் சீதாலட்சுமி.

''சின்னம்மா!''

அந்த அழுத்தம், அதில் தொனித்த அதி காரமும் அதட்டலும், ஒரு கணம் அனே வரையும் விதிர் விதிர்க்க வைக்க, எதிர் பாராத தாக்குதலில் நிலேகுலேந்து போன சின்னம்மா புற்றில் மறையும் பாம்பாகத் தன் அறைக்குள் புகுந்தாள்.

இரு மருங்கிலும் பொட்டல் வெளி. காய்ந்து கல்லாக இறுகிப்போன செம் மண் பிரதேசம்.

சீதாலக்ஷ்மி கனமான மௌனப் போர்வை யில் சுருண்டு காரின் பின் இருக்கையில் அமர்ந்திருந்தாள். ரமணி மனத்தின் ஆவே சத்துக்கு வடிகால் தேடுபவன் போல் பேய் வேகத்தில் காரை ஓட்டிக் கொண்டிருந்தான்.

''ரமணி... கொஞ்சம் மெள்ளத்தான் போயேன். அம்மாவை அவ்வளவு சீக்கிரமா இறக்கி விட்டுடணுமா?''

ரமணி சிறு குழந்தையானன்.

''நீங்கதானேம்மா ஒரே பிடிவாதமா கிரா மத்துக்குக் கிளம்பினேள்? சின்னம்மாவோட தப்புக்கு எங்களுக்குத் தண்டனேயா? இது என்ன நியாயம் அம்மா?''

''ரமணி...''

பம்பாயில் கூட்டுறவு வங்கி ஒன்றில் உள்ளிருப்பு வேலைநிறுத்தம் நடத்தினர் ஊழியர்கள். மாலை 6-30 மணிக்கு அவர்கள் வீட்டுக்குக் கிளம்பியபோது வாடிக்கையாளர்கள் வழிமறித்துக் கொண்டனர். தங்களது வேலைகளை முடித்துக் கொண்டு இரவு 9-30 மணிக் குத்தான் ஊழியர்களை வீட்டுக்குப் போக அனுமதித்தார்களாம்!

ஆதாரம்: டைம்ஸ் ஆஃப் இந்தியா

ஆர். மார்க்கண்டன்



''அவள் ஒரு ராட்சசிதான். பயங்கரமான முள் மரம்தான்....''

''ரமணி...கேளுப்பா...சின்னம்மாகிட்டே எனக்கு எந்தக் கோவமோ வெறுப்போ இல்லே... முள் மரமானலும்... அதனேட நிழல் குத்தாதுன்னு எனக்குத் தெரியா தாப்பா...? கிராமம் என்ன ரொம்பத் தூரமா என்ன? கேவலம் ஏழு மணி நேர பிரயாண தூரத்திலே நான் இருக்கப் போகி றேன். நேரம் கிடைச்சப்ப மனசு நினேச்சப்ப நீங்களெல்லாம் வந்து போகலாம். பெரியவா வெச்சுட்டுப் போன வீட்டையும் நிலத்தை யும் கவனிக்க ஒருத்தர் இருக்கணுமோ இல் லேயோ?''

''அம்மா... இந்தச் சாக்கை யெல்லாம் நான் நம்பணுமா? அன்னிக்கு அவ பேசின பேச்சுக்கு வேற ஒருத்தரா இருந்திருந்தா பத்திரகாளி அவதாரமே எடுத்திருப்பா...''

''உங்கப்பா இன்னைக்கு வாழ்க்கையிலே வெற்றி பெற்ற கௌரவமான பெரிய மனு ஷரா இருக்கார்னு, அதுக்குப் பின்னணியா சின்னம்மாவை அவர் கைப்பிடிச்ச அதிர்ஷ் டமோ, இளம் வயதில் அவள் ஊக்கத்தோட கொடுத்த அனுசரிப்பான தூண்டுதலோ தான் காரணமா இருக்க முடியும். என் விவரம் அறியாத பால்ய புருஷன் அர்தானவ இன்னிக்கு கௌரவமும் அந்தஸ்தும் மிக்க ஓர் உயர்ந்த மனிதரா, ஏ. அனந்தராமனு, ஏ. ஏ. ஆரா மாத்திட்ட பெருமை முழுக்க சின்னம்மாக்குத்தான் சொந்தம். அவர் அவள் அதிருஷ்டத்தின் உழைப்பின் சொத்து. அதிலே பங்கு கேக்க எனக்கு... எனக்கு என்ன உரிமை இருக்கு ரமணி?''

சீதாலட்சுமியின் மெல்லிய விசும்பல் அடங்க நெடு நேரமாயிற்று.

''அவளோட பெருந்தன்மையினுலேதான் ஆலா தழைச்சிருக்கிற அந்தக் குடும்பத்தில என்னையும் ஒரு விழுதா ஏத்துண்டா. பாவம்... அவளோட நோய் தான் அவளே அப்படி ஆட்டிப் படைக்கிறது.

''பொண்ணுக்கு ஒவ்வொரு பருவ மாற்ற மும் ஒரு கண்டம்தான் ரமணி. ஆரம்பத்தில ஒரு விதமா நா அதை அனுபவிச்சேன். இப்ப இன்னெரு பருவத்தைக் கடக்க சின் னம்மா கஷ்டப்படறா. அவளேப் புரிஞ்சுண்டு அன்பு செலுத்தி. அவளே அந்தக் கட்டத் தைப் பத்திரமாத் தாண்ட வெச்சிடு ரமணி! நல்ல வைத்தியமா வேணும்னுலும் பாத்துடு ரமணி. இந்த மாற்றத்தால ஏற்படற சங்கடங்களால அவ எதையுமே இழந்திடக் கூடாது ரமணி. இழக்கவே கூடாது. நான் அனுபவிச்சதெல்லாம் இழந்த இழப்பெல் லாம் என்னேடவே போயிடட்டும். அவ ளாவது ஒழுங்கா சௌக்கியமா நெடுங்காலம் குடும்பம் நடத்தட்டும். அதுக்காக நான் அந்த அனந்தராமனேயும் சீதாலக்ஷ்மித் தாயாரையும் தினமும் பிரார்த்திச்சிண்டே இருப்பேன்.''

ரமணி கண்களே மறைத்த நீரைச் சுண்டி எறிந்தான். மெல்ல மெல்ல நெருங்கி வரும் கிராமத்தைக் குறியிட்டுக் காட்டி அனந்த ராமனின் ஆலயக் கோபுரம் நெடிதுயர்ந்து நின்றது துல்லியமாகத் தெரிந்தது.




• முதல்வரின் கிராமப்புற அபிவிருத்தி தொடர்பாக 2-1-83 இதழின் வட்டமேஜையில் ஒரு கடிதமும் உங்கள் விளக்கமும் வெளியாகியிருந்தது.

''நில உடைமை பதிவு மேம்பாட்டுத் திட்டம்'' என்ற பெயரில் நிலத் தஸ்தாவேஜுகளை நாளது தேதியில் புதுப்பிக்கவும், கூட்டுப் பட்டாக்களை தனிப் பட்டாக்களாகப் பிரித்து பட்டா பாஸ் புத்தகம் என்ற சட்டபூர்வமான ஆவணத்தை நில உரிமையாளர்களுக்கு வழங்கவும் ஓர் அருமையான திட்டத்தை முழுவீச்சில் 5000 பணியாளர்களைப் பணி அமர்த்தி, தமிழக அரசு செயலாற்றி வருகிறது. நில உரிமையாளர்களுக்குக்கு றிப்பாக விவசாயிகளுக்கு மிகுந்த பயன் தரும் திட்டத்தை 'கல்கி' மூலம் மக்களின் கவனத்திற்குக் கொண்டு வருவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

கோவை — எல். ஸ்ரீனிவாசன்

• இவ்வாரத் தலையங்கம் ஆரம்பத்தில் கார்டூனுக்கு விரிவுரை கொடுப்பது போல் ஆரம்பித்து மெல்ல மெல்ல சூடு பிடித்துமர மண்டைகள் மனத்திலும் பதியும்படி அமைந்திருந்தது. நல்ல நடுநிலைமைத்தனமான தலையங்கம்.

பெங்களூர்-16 — டால்ரிக்ஸ்.

• கணித ஜோதிடரால் மட்டும்தான் 'நியூமராலஜியின்படி' சோதிடம் சொல்ல முடியுமா? வாசகர்களாகிய எங்களால் சொல்ல முடியாதா என்ன?

'கல்கி'க்கான எண்ணும் மூன்றுதான். கல்கியின் பெயரும் புகழும் இந்த ஆண்டில் ஓங்கி நிற்கும். பத்திரிகைகளில் உயர்ந்த ஸ்தானத்தை வகிக்கும்.

தூத்துக்குடி-6 — இரணியல் 'கலை'

• ஏனய்யா! டி.வி.எஸ்.- மொபெட் கிடைக்கவில்லையே என்று வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் வேளையில் நீர் வேறு பாரதி பாடல்களின் நயங்களை அசைபோட்ட அனுபவமே மிகச் சிறந்த பரிசு என்று கூறி எமது கோபத்தைக் கிளறியுள்ளீரே!

சுவாமிமலை — செல்வி எஸ். ஜெயந்தி

• புஷ்பா தங்கதுரையின் 'சங்கிலித் திருடன்' என் இருதயத்தையும் திருடிக்கொண்டான். பைக் வேகத்தில் சென்ற புஷ்பா தங்கதுரையின் நடை வேகம் படுஅசாத்தியம்.

கிருஷ்ணகிரி — சி. சௌந்தரபாண்டியன்

• 'தேர்தல் களத்தில் நமது நிருபர்' தேர்தல் முன்னோட்டக் கட்டுரையில் ஒருதலைப் பட்சமாகவே செயல்பட்டுள்ளீர் நீங்கள்! எதிர்க் கட்சிகளுக்கு உள்ள வாய்ப்புக்களையும் குறைத்து மதிப்பிட்டு ஊக்கமிழக்கச் செய்யும் நீங்கள் உண்மையிலேயே ஆளும் கட்சியின் ஜால்ராவே என்பதே எங்களது கணிப்பு.

கோயமுத்தூர்-2 — கே. வாசுதேவன்

• ''தேர்தல் களத்தில் நமது நிருபர்'' என்ற சிறப்புக் கட்டுரை உண்மையில் எங்களைத் தேர்தல் களத்துக்கே அழைத்துச் சென்று விட்டது.

புதுவை-3 — வி. குருமூர்த்தி

• 'ரஸ்புடீன்' பற்றிய கட்டுரை அருமை. இதைப் போன்ற பகுதிகள் தொடரட்டும்.

சென்னை-45 — கே. எஸ். சுப்பிரமணியம்

• தமக்குக் கீழ் உள்ளவர்களின் மீது குற்றச்சாட்டுக்களை அள்ளி வீசி, பதவி சுகத்தை அனுபவிக்கும் ரயில்வே அமைச்சர் சவுத்ரி போன்றவர்கள் நாட்டுக்குத் தேவையா?

மேட்டுபாளையம்ஆனந்திமு.கல்யாணசுந்தரம்

• பாலகுமாரனின் இரும்புக் குதிரைகள் நாவலுக்கு நீங்கள் வெளியிட்டிருந்த முன்னோட்டமும், மணியன் செல்வனின் ஓவியமும் ஒருவித எதிர்பார்ப்பை என்னுள் உருவாக்கி விட்டன.

போடிநாயக்கனூர் — எஸ். சையது முகமது

மொகலாய மன்னர் பேரரசர் பாபர் இரு ஆடவரைத் தம் தோள் மீது சுமந்துகொண்டு மதில் சுவர் மேல் ஓடும் ஆற்றல் உடையவரா யிருந்தார்.

வியக்கத்தக்க வீரம் படைத்த பாபர், தாம் சந்தித்த நதிகளை யெல்லாம் நீந்தியே கடந்திருக்கிறார். அவர் ஒரு சமயம் முப்பத்தி மூன்று உந்துகளிலேயே கங்கையின் எதிர்க் கரைக்கு நீந்திச் சென்றுமீண்டும் அதேவேகத்தில்திரும்பி வந்ததாக அவரின் நினைவுக் குறிப்புகளில் எழுதி வைத்துள்ளார்.

-பி. நாராயணன்



# டு-இன்-ஒன்






போர்ஹென்ஸ்
டபிள்–ஆக்ஷன்
டூத்ப்ரஷ் உங்கள்
பற்களை சுத்தம்
செய்யும்போதே
ஈறுகளையும்
தேய்த்துக்
கொடுக்கிறது.

**போர்ஹென்ஸ்**
டு-இன்-ஒன்
டூத்ப்ரஷ்

அடல்ட்
மற்றும் ஜூனியர்

277 F-203.TAM

# கள்வனின் காதலி

## பூர்வ கதை

பூங்குளம் கிராமத்தில் செல்வந்தர் வீட்டுப் பெண் கல்யாணியைக் காதலிக்கிறான் ஏழை முத்தையன். அவளுக்கும் ஐம்பது வயதான தாமரை ஓடைப் பண்ணையாருக்கும் திருமணம் நிச்சயமானபோது கல்யாணி, முத்தையனுடன் கண்காணாத தேசத்துக்குச் சென்று விடத் தயாராக வருகிறாள். ஆனால் தன்னிடம் பாசம் சொரிந்து தன்னையே நம்பியிருக்கும் தங்கை அபிராமியை எண்ணி முத்தையன் அதற்கு மறுத்து விடுகிறான். கல்யாணி ஏமாற்றத்துடன் கோபமாகத் திரும்புகிறாள்.

முத்தையனுக்குத் திருப்பறங்கோயில் மடத்தில் கணக்கெழுதும் வேலை கிடைக்கவே தங்கையுடன் பூங்குளத்தைவிட்டுக் கிளம்பிச் சென்று விடுகிறான். மடத்தில் செல்வாக்குடன் திகழ்ந்த கார்வார் சங்குப் பிள்ளை முத்தையன் இல்லாத போது அவன் வீட்டுக்கு வந்து அபிராமியைப் பலவந்தப்படுத்த முயலும் போது முத்தையன் யதேச்சையாக வந்து அவரை நையப் புடைத்து விடுகிறான். பிறகு அபிராமி தடுத்தும் கேளாமல் சங்குப் பிள்ளை பற்றிப் போலீஸில் புகார் கொடுத்து வரப் புறப்படுகிறான்.

இதற்குள் வீட்டை விட்டு ஓடிய சங்குப் பிள்ளை இன்ஸ்பெக்டர்சர்வோத்தமசாஸ்திரியிடம் முத்தையன்மடத்துப் பணத்தைத் திருடியதாகவும் அதட்டிக் கேட்டதற்குத் தன்னை அவன் அடித்து நொறுக்கிவிட்டதாகவும் புகார் செய்கிறார். கலெக்டரைப் பார்க்க அவசரமாகச் சென்று கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் ''இவரிடம் எழுதி வாங்கிக் கொண்டு முத்தையனை லாக்-அப்பில் வையுங்கள்; திரும்பி வந்து விசாரிக்கிறேன்'' என்று கான்ஸ்டபிள்களிடம் கூறிப்போகிறார். முத்தையன் சிறைப் படுகிறான்.

இரவு நேரம். தனியே இருக்கும் அபிராமியை எண்ணிக் கவலைப்படும் முத்தையன் இன்னொரு கைதியான குறவன் சொக்கன் துணையுடன் லாக்-அப்பிலிருந்து தப்பி ஓடி விடுகிறான். இதற்குள் இட்டிலி வியாபாரம் செய்யும் செங்கமலத்தாச்சி தனிமையில் அழுது கொண்டிருந்த அபிராமியிடம் இரங்கி அவளை இன்ஸ்பெக்டர் சர்வோத்தம சாஸ்திரியின் மனைவி மீனாட்சியிடம் அழைத்துப் போகிறாள்.

லாக்கப்பிலிருந்து தப்பி வந்த முத்தையன் வீடு பூட்டியிருப்பதுகண்டு பதறுகிறான். துரத்தி வரும் போலீஸாரிடமிருந்து தப்ப நாணல் காட்டிற்குள் ஒளிகிறான். பசிக்கு உணவு கேட்கப்



போய் ''திருடன்'' என்று பழிக்கப்படுகிறான். சிறையிலிருந்து தப்பிய குற்றம் தவிர வழிப்பறிக் குற்றமும் சேர்ந்து கொள்கிறது. சமுதாயம் அவனைத் திருடனாகவே ஆக்கி விடுகிறது! குறவன் சொக்கன், கள்வன் முத்தையனுக்கு உதவியாளனாகிறான்.

திருடனின் தங்கையைத் தன் வீட்டில் வைத்துக் கொள்ள விரும்பாத சர்வோத்தம சாஸ்திரி அவளைச் சென்னையில்தன் சகோதரி நடத்தி வரும்அநாதை ஆசிரமத்துக்கு அனுப்பிவிட உத்தேசிக்கிறார். அவர் மனைவி மீனாட்சி அபிராமியை அழைத்துக் கொண்டு ரயிலேறுகிறாள். பக்காத் திருடன் முத்தையனின் சாகசங்கள் பற்றி அதிசயத்துடன் எல்லோரும் பேச அவன் புகழ் பரவுகிறது.

ஓர் இரவு ஒரு கல்யாணத்தில் புகுந்து எல்லோரையும் அலறி ஓடச் செய்த முத்தையன், சங்குப் பிள்ளையை வளைத்துப் பிடித்து மிரட்டி அபிராமி சென்னையில் பத்திரமாக இருப்பதைத் தெரிந்து கொண்டு ஓரளவு நிம்மதி அடைகிறான்.

தன்னை மணந்து கொண்ட கல்யாணியின் முகத்திலே சந்தோஷமே இல்லாததைக் கண்ட தாமரை ஓடைப் பண்ணையார், கல்யாணத்தின்போது இருவரும் சேர்ந்து எடுத்துக் கொண்ட புகைப் படத்தைப் பார்த்ததும் திடுக்கிடுகிறார். வயதான காலத்தில் தாம் பெரிய தவறு செய்துவிட்டதை உணர்கிறார். உடல் நலிவுற்றுப் படுத்த படுக்கையாகிறார். மரணத் தருவாயில் கல்யாணிக்குக் கல்யாணப் பந்தத்திலிருந்து விடுதலை தருகிறார். அவள் தன் வயதுக்கேற்ற இளைஞனை மணந்து சந்தோஷமாக வாழ்ந்தால்தான் தம் ஆத்மா திருப்தி அடையும் என்கிறார். இளம் பெண் கல்யாணி கைம்பெண் ஆகிறாள்.

குறவன் சொக்கன் மூலமாகப் புலிப்பட்டி ஜமீன்தாரின் கையாள் முத்தையனைச் சந்திக்கிறான். ஒரு பெண்ணின் கொட்டத்தை அடக்க அவள் வீட்டில் போய்த் திருட வேண்டும் என்று கூறி அதற்காகப் பணமும் கொடுத்து அனுப்பியிருக்கிறான் புலிப்பட்டி. ''அவளைப் பைசல் பண்ணி விட வேண்டும்'' என்கிறான் அந்தக் கையாள். அந்தப் பெண் முத்தையனைப் பிடித்துப் போலீஸில் ஒப்படைக்கப்போவதாய்ச் சபதம் செய்திருக்கிறாளாம்.

இதைக் கேட்டு முத்தையன் ரோஷத்துடன் ஒரு நாள் இரவு அவன் வீட்டில் கொள்ளையடிக்கப் போகிறான். முற்றத்தில் குதித்து டார்ச் லைட்டை அடித்துப் பார்க்கிறான்... கல்யாணி! ''என் நகைகள்தானா உனக்கு வேண்டும் முத்தையா?'' என்று கேட்கிறாள் கல்யாணி.

அமரர் கல்கி

## அத்தியாயம் 25

## புலிப்பட்டி பிள்ளைவாள்

**க**தைகளிலும்இதிகாசங்களிலும், கதாநாயகன் அல்லது கதாநாயகிக்கு விரோதிகள் சிலர் தோன்றுவார்கள். கதை முடியும்வரையில் அவர்கள் கதாநாயகர்களுக்கு இன்னல் விளைவிக்க முயன்று கொண்டேயிருப்பார்கள். கடைசியில், கதை முடியும் சமயத்தில் தங்களது தீச்செயல்களுக்கு அவர்கள் தண்டனை அடைவார்கள்.

ஆனால் வாழ்க்கையில் சாதாரணமாக இவ்வாறு நடப்பதில்லை. அவ்வப்போது நமக்குச்சில சிநேகிதர்களோ. விரோதிகளோ ஏற்படுகிறார்கள்.

அவர்களால் சில நன்மைகளும் தீமை களும் விளை கின்றன. அத்துடன் அவர் களுடைய சிநேகமோ, விரோதமோ தீர்ந்தது போகிறது.

நமது வாழ்க்கையில் இன்னல் விளை விப்பவரும் உதவி புரிகிறவரும் எப்போ தும் ·ஒருவராகவே இருப்பதில்லை.

* * *

மூத்தையன் — கல்யாணியின் வாழ்க் கையிலும் இப்படித்தான் இருந்தது. முத்தையனுடைய வாழ்க்கையில் கார்- வார் பிள்ளை பிரவேசித்ததையும் அத னால் விளைந்த பலனையும் பார்த்தோம். முத்தையனுடைய வாழ்க்கையைப் பொறுத்த வரையில் அபிராமி சென் னைக்குச் சென்ற செய்தியை அவனுக்கு அறிவித்ததுடன் சங்குப்பிள்ளையின் லீலை முற்றுப் பெற்றது. பிறகு, அந்தப் புண்ணிய புருஷர் வேறு எந்த இளம் பெண் அநாதையாகவோ, நிராதர வாகவோ இருக்கிறாள்; எந்த ஏழையின் குடியைக் கெடுக்கலாம்; எந்தக் குடிசை யில் தீயை வைக்கலாம் என்று பார்த்துக் கொண்டு போய் விட்டார். அவரு டைய பாப கிருத்தியங்களுக்குத் தக்க தண்டனை அளிக்கும் பொறுப்பை நாமும் பகவானுக்கே விட்டுவிட வேண்டியதா யிருக்கிறது.

முத்தையனுடைய வாழ்க்கையில் அந்த ஆட்டுத் தோல் போர்த்திய காட்டுப் பூனை பிரவேசித்தது போலவே, கல்யாணியின் வாழ்க்கை யில் பிரவேசித்த ஒரு மகா பாபியைப் பற்றி நாம் இப்போது சொல்ல வேண்டி யிருக்கிறது. அவனுக்குப் புலிப் பட்டி ரத்தினம் பிள்ளை என்று பெயர். தாமரை ஓடைப் பண்ணையாருக்கு நெருங்கிய தாயாதி உறவு பூண்டவன். அவனுடைய தகப்பனார் காலத்தில் தாமரை ஓடைப் பண்ணைக்குச் சமமான சொத்து இந்தக் குடும்பத்துக்கும் இருந் தது. ஆனால் பிள்ளையாண்டான் தலை யெடுத்ததும் அந்த நிலைமை மாறிற்று. பையன் சென்னைப் பட்டணத்தில், காலேஜில் படித்துக் கொண்டிருந்த போதே டம்பாச்சாரித்தனம் எல்லாம் கற்றுக் கொண்டான். பிறகு சீமைக் கும் போய்விட்டு வந்தான். சென்னை யிலும், சீமையிலும் தாம் கற்றுக் கொண்டு வந்த நாகரிகத் தோரணை யுடனேயே புலிப்பட்டியில் அவன் வாழ்க்கை நடத்தத் தொடங்கினான்.

பெரிய மனுஷர்களுடைய சிநேகம் அதிகமாயிற்று. அவர்களுக்கெல்லாம் அடிக்கடி பார்ட்டிகள் நடத்த வேண்டி யிருந்தது. நாகரிகமாய் டிரஸ் பண் ணிக் கொள்வதிலும், உயர்தர விருந் துகள் நடத்துவதிலும், பிறத்தியா ருடைய எலக்ஷன்களில் முன்னின்று உழைத்து வேலை செய்வதிலும் புலிப் பட்டிப் பிள்ளைவாளுக்கு இணையானவர் இந்த ஜில்லாவிலேயே கிடையாது என்று பெயர் வந்தது.

பிறகு கேட்பானேன்? பிதிரார்ஜிதச் சொத்து நாளுக்கு நாள் குறைந்து வந்தது. கடனோ நாளுக்கு நாள் வளர்ந்தது வந்தது.

ஆனாலும் ரத்தினம் அதைச் சிறிதும் பொருட் படுத்தாமல், எப்போதும் போல் டாம்பீகச் செலவு செய்து வந் தான். அவன் கவலையின்றி இருந்த தற்கு ஒரு காரணமும் இருந்தது. தாமரை ஓடைப் பண்ணையாருக்குச் சந்தானம் இல்லாதபடியால், அவ ருடைய திரண்ட சொத்தெல்லாம் தனக்கே வரப் போகிறதென்று அவன் மனப்பால் குடித்துக் கொண்டிருந் தான்.

ரத்தினம் சென்னையில் படித்துக் கொண்டிருந்த காலத்தில், பஞ்சநதம் பிள்ளைக்குக் கூட அத்தகைய அபிப்பி ராயம் இருந்துதான் வந்தது. ஆனால் அவன் புலிப்பட்டிக்கு வந்த பிற்பாடு அவனுடைய நடை உடை பாவனைகள் பஞ்சநதம் பிள்ளைக்கு அளவில்லாத வெறுப்பை உண்டாக்கியது. தன்னு டைய சொத்தில் ஒரு காலணாக் கூட இந்தத் தூர்த்தனுக்குச் சேரக்கூடாது என்று அவர் தீர்மானித்து விட்டார். ஆனால் இது அவனுக்குத் தெரியாது.

மோசமான 'பாக்கிங்', சரியான முறையில் அவற்றைக் கையாளாதது, நல்ல முறையில் சேமித்து வைக்காதது, ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத் துக்கு எடுத்துச் செல்லும்போது கவனக் குறைவு ஆகிய காரணங்களால், நம் நாட்டில் 3500 கோடி ரூபாய் மதிப் புள்ள பொருட்கள் ஆண்டுதோறும் நஷ்டமாவதாகக் கணக்கிட்டிருக்கின் றனர்!

ஆதாரம்: ஒரு விளம்பரம்
—ஆர். மார்க்கண்டன்



# யூ.எல்.ஐ.பியில் முதலீடு செய்ய மூன்று முக்கிய காரணங்கள்.



யூ.எல்.ஐ.பி (யூனிட் லிங்க்ட் இன்சூரன்ஸ் பிளான்) உங்கள் குடும்பத்துக்கு பாதுகாப்பு கொடுப்பதுடன் வேறு சில நன்மைகளையும் கொடுக்கிறது.

<u>வரிச்சலுகை</u> : ஆண்டு தோறும் யூ.எல்.ஐ.பி யில் முதலீடு செய்யும் உங்கள் பணத்திற்கு பிரத்யேக வரிச்சலுகை கிடைக்கிறது.

<u>ஆயுள் பாதுகாப்பு</u> : நீங்கள் சேர்ந்திடும் குறியீட்டுத் தொகைக்கு மருத்துவ பரிசோதனை இல்லாமலே ஆயுள் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது.

<u>விபத்து பாதுகாப்பு</u> : ரூ 15,000 வரை விபத்து பாதுகாப்பும் அளிக்கப்படுகிறது.

இது மட்டுமா ? முதலீட்டுக்கு அதிக வருமானமும் உண்டு.

| காலம் | வருடாந்திர தவணை தொகை | குறியீட்டுத் தொகை | திட்ட முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| 10 வருடங்கள் | ரூ 1,200 | ரூ 12,000 | ரூ 18,500 |
| 15 வருடங்கள் | ரூ 800 | ரூ 12,000 | ரூ 23,000 |

ரூ 12,000 மதிப்புள்ள யூ.எல்.ஐ. பி திட்டத்தில் சேர்ந்து 3 ஆண்டுகள் கழித்து மற்றுமொரு திட்டத்திலும் சேரலாம். வரிகளைத் தவிர்த்திட திட்டமிடுங்கள் இப்பொழுதே. இதர விபரங்களுக்கு எங்கள் ஏஜெண்டுகள், தலைமைப் பிரதிநிதிகள் மற்றும் பாங்க் ஆஃப் பரோடாவின் கிளைகளை அணுகுங்கள்.



## யூனிட் ட்ரஸ்ட் ஆப் இந்தியா

தலைமை அலுவலகம் : பம்பாய்
(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)
பிராந்திய செயலகம் :
ரெஜினா மான்ஷன், 46 செகண்ட் லைன் பீச்,
சென்னை-600 001. போன் : 27433

எங்கள் முக்கிய பிரதிநிதிகள் : ● ஏ. தனபால், 10-ஜே, ஹரிலின்ரோடு, கோவை-641 018 போன் : 34776 ● எம். ராமமூர்த்தி, 30 எல்.ஐ.சி காலனி, மதுரை : 625 002 போன் : 30160 ● கே. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி நகர், தஞ்சாவூர் : 613 007 போன் : 1224 ● என்.கே. இன்கர்சால், 155 சவர்ணம்பிகை தெரு, அன்னதானப்பட்டி. சேலம் : 636 002 போன் : 64302 ● எம்.எம். காஜா, பக்காளி பில்டிங் அனெக்ஸ், 41-B, திருவனந்தபுரம் ரோடு, பாளையங்கோட்டை : 627 002 போன் : 2395 (வீடு)

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.**

Sista's-UTI. 74.82.TM. C




''சொத்து எங்கே போகிறது? இவருக்குக் கொள்ளி போட நம்மைத் தவிர வேறு யார்?'' என்று எண்ணி அவன் நிச்சிந்தையாய் இருந்தான்.

எனவே திடீரென்று ஒரு நாள் தாமரை ஓடைப் பண்ணையார் இரண்டாந் தாரமாகக் கல்யாணியைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறார் என்ற செய்தியை அறிந்ததும் ரத்தினம் பிள்ளைக்கு இடி விழுந்தாற் போலிருந்தது. அவன் கோபம் கொண்டு கல்யாணத்துக்குக் கூட வரவில்லை. 'கிழவனுக்கு என்னகல்யாணம் வேண்டிக் கிடக்கிறது?'என்றுகண்டவர்களிடமெல்லாம் தூற்றிக் கொண்டிருந்தான். அவனுக்கு அப்போது வந்த ஆத்திரத்தில், இந்த மாதிரி வயதானவர்கள் சிறு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளும் அக்கிரமத்தைப் பற்றிப் புனைபெயருடன் பத்திரிகைகளுக்குக் கூட ஒரு கடிதம் எழுதினான். அது வெளியானதும், தனக்குத் தெரிந்தவர்கள் எல்லாரையும் கூப்பிட்டு வைத்து, ''பத்திரிகையில் இது ஒரு விஷயம் வந்திருக்கிறது பார்த்தீர்களா?'' என்று அதைப் படித்துக் காட்டினான்.

சில மாதங்கள் இப்படிக் கோபத்தில் ஆழ்ந்திருந்த பிறகு ஒரு நாள் தாமரை ஓடை வீதி வழியாகப் போனபோது அவன் தற்செயலாகக் கல்யாணியைப் பார்க்க நேர்ந்தது. அவளுடைய திவ்ய சௌந்தர்யத்தைப் பார்த்ததும் அவன் பிரமித்தே போனான். ''ஆகா! இப்பேர்ப்பட்ட அழகியையா இந்தத் தலை நரைத்த கிழவன் மணந்து கொண்டிருக்கிறான்?'' என்று எண்ணினான். இயற்கையிலேயே காமுகனும், ஒழுக்கத்தால் தூர்த்தனுமான அவனுடைய உள்ளத்தில் அக்கணமே பாப சிந்தை குடி கொண்டது.

## அத்தியாயம் 26
## ''ஆ! பிடி!''

சில நாளைக்கெல்லாம் ரத்தினம் பஞ்சநதம் பிள்ளையிடம் சென்று தான் தெரியாத்தனமாகச் செய்த குற்றங்களை மன்னிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டான். பஞ்சநதம் பிள்ளை அவன் முன் செய்த குற்றங்களையும் பொருட்படுத்தவில்லை. இப்போது மன்னிப்புக் கேட்பதையும் பொருட்படுத்தவில்லை. அவன் அவ்வளவு பணிவு கொண்டு பேசியது அவருக்குச் சிறிது வியப்பு அளித்ததாயினும், அதைப் பற்றி அதிகமாகச் சிந்தனை செய்யாமல் ''தம்பி! நீ மன்னிப்புக் கேட்கவாவது? நான் உன்னை மன்னிக்கவாவது? இதெல்லாம் எதற்காக? உன்மேல் எனக்கு ஒரு கோபமும் இல்லை. போய் வா!'' என்று சொல்லிவிட்டார். அவருடன் சிநேகம் செய்து கொண்டு அடிக்கடி அவர் வீட்டுக்கு வருவதற்குச் சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொள்ளும் நோக்கத்துடன் ரத்தினம் வந்தான். அந்த நோக்கம் நிறைவேறாமற்போகவே சலிப்புடன் திரும்பிச் சென்றான்.

பிறகு அவன் இன்னும் இரண்டு மூன்று தடவை மானத்தை விட்டுப் பஞ்சநதம் பிள்ளையின் வீட்டுக்குப் போனான். அப்பொழுதெல்லாம் தூரத்தில் கல்யாணி அங்குமிங்கும் நடமாடுவதைப் பார்க்கத்தான் முடிந்தது. அவளுடைய அருகில் நெருங்கவோ, அவளுடன் பேசவோ சௌகரியம் ஏற்படவில்லை. இதனால், அவனுடைய உள்ளத்தை எரித்துக் கொண்டிருந்த தீ இன்னும் கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது.

பஞ்சநதம் பிள்ளை காலம் சென்ற போது, ரத்தினம் ஊரில் இல்லை. ஆனால் அவருடைய மரணச் செய்தி கேட்டதும் அவன் பரபரப்புடன் ஊருக்கு ஓடிவந்தான். பஞ்சநதம் பிள்ளை உயில் ஒன்றும் எழுதி வைக்காமல் இறந்திருந்தால், கல்யாணிக்குப் பிற்காலம் அவருடைய சொத்துக்களுக்கெல்லாம் இவனே உரியவன். ஆகவே, சொத்துக்களின் மேற்பார்வையை இப்போதே தான் எடுத்துக் கொள்ள வேண்டியது தான். இதன் மூலம் கல்யாணியுடன்

பேசிப் பழகுவதற்கும் அவசியம் ஏற்படும். இவ்வாறு தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்த சந்தர்ப்பம் எதிர்பாரா முறையில் வந்து விட்டதாகவே அவன் கருதினன்.

தாமரை ஓடைக்கு வந்து விசாரித்து உயில் எழுதப்பட்டிருக்கும் விவரம் தெரிந்ததும் அவனுடைய உற்சாகம் வெகுவாகக் குறைந்தது. உயிலே பொய் உயில், போர்ஜரி செய்தது, செல்லாதது என்று வழக்காடலாமா என்று சிந்தனை செய்யத் தொடங்கி

ஒரு சமயம் ராஜாஜியை ஒருவர் கேட்டார்:

''தாங்கள் முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவதாகக் குறை கூறுகிறார்களே?''

''அபிப்ராயங்களை மாற்றிக் கொள்வது தவறல்ல. நான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று சாதிப்பதுதான் தவறு. அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்வது அறிவு வளர்ச்சியையும் முதிர்ச்சியையும் காட்டுகிறது. மா வடுவாக இருக்கும்போது துவர்க்கும். காயாக இருக்கும்போது புளிக்கும். கனியாக இருக்கும்போது இனிக்கும். இவை மூன்றும் வெவ்வேறு பழ வகை என்று கூறுவோமா என்ன?''

ஆதாரம்: ராஜாஜியின் அருள் மலர்கள்
தகவல்: பிரகாஷ்முரளி



னன். ஆனாலும் இதை வெளியில் காட்டிக்கொள்ளாமல் கல்யாணியின் வீட்டுக்குச் சென்று உத்தரகிரியைகளில் ஒத்தாசை செய்தான். கல்யாணியின் தகப்பனார் திருச்சிற்றம் பலம் பிள்ளைக்கு அவனுடைய பூர்வோத்தரம் ஒன்றும் தெரியாதபடியால் இறந்து போனவருக்கு முக்கியமான பந்துவாகவே அவனைக் கருதி, எல்லா விஷயங்களிலும் அவனுடன்கலந்து யோசனை செய்யத் தொடங்கினார். அவன் அபிப்பிராயப்படியே சகல காரியங்களும் செய்து வந்தார்.

* * *

கருமங்கள் எல்லாம் ஆனதும், நில புலன்களின் சாகுபடியைப் பற்றித் தீர்மானிக்க வேண்டி வந்தது. நிலங்களைப் பிரித்துக் குத்தகைக்கு விட்டு விட வேண்டும் என்றும் அதற்கு ஏற்பாடு தாம் செய்வதாகவும் ரத்தினம் பிள்ளை சொன்னார். திருச்சிற்றம்பலம் பிள்ளையும் இதற்குச் சம்மதித்தார்.

அன்றிரவு சாப்பிடும்போது அவர் இவ்விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தார். அது கல்யாணியின் காதில் விழுந்தது. அவள் உடனே, ''அப்பா! சாகுபடி எல்லாம் இத்தனை நாள் நடந்து வந்தது போலவே இனிமேலும் நடக்க வேண்டும். மாறுதல் ஒன்றும் கூடாது'' என்றாள்.

அதிகாரத் தோரணையுடன் அவள் இவ்வாறு பேசியது திருச்சிற்றம்பலம் பிள்ளைக்கு அதிசயமாக இருந்தது; சிறிது கோபத்தையும் உண்டு பண்ணிற்று.

''உனக்கென்ன தெரியும் இதெல்லாம்? 'சொந்தப் பண்ணை வைத்து நடத்த முடியாது' ஆள்களை மேய்ப்பது ரொம்பக் கஷ்டம்; என்று ரத்தினம் பிள்ளை சொல்கிறாரே!''

''அது யார் அது ரத்தினம் பிள்ளை? நம்முடைய வீட்டுக் காரியத்துக்கு அவர் என்ன யோசனை?'' என்றாள் கல்யாணி.

திருச்சிற்றம்பலம் பிள்ளை திகைத்துப் போனார். ஆனாலும் அவர் சமாளித்துக் கொண்டு, ''என்ன அப்படித் தூக்கி எறிந்து பேசுகிறாய்! புலிப்பட்டிப் பிள்ளையைத்தான் சொல்கிறேன். இந்த ஊர் நெளிவு களிவு எல்லாம் அவருக்குத்தானே தெரியும்? நான் ஊருக்குப் புதிது. நீயோ சிறு பெண்; உலகம் தெரியாதவள்; உன்னால் என்ன முடியும்...'' என்று சொல்கையில் கல்யாணி குறுக்கிட்டு, ''அப்பா! இந்த யோசனையெல்லாம் உங்கள் பெண்ணைக் கிழ மாப்பிள்ளைக்குக் கல்யாணம் செய்து கொடுப்பதற்கு முன்னாலேயே உங்களுக்குத் தோன்றியிருக்க வேண்டும்'' என்றாள்.

திருச்சிற்றம்பலம் பிள்ளையின் வாய் அடைத்துப் போய் விட்டது. கல்யாணியின் குணத்தில் ஏற்பட்டிருக்கும் மாறுதல் அவருக்கு அர்த்தமாகவே இல்லை. இந்த வீட்டில் கல்யாணி தான் சர்வ சுதந்திர யஜமானி, தமக்கு

ஒரு அதிகாரமும் இல்லை என்று அவருக்கு இரண்டொரு நாளில் ஸ்பஷ்டமாகத் தெரிந்து போகவே, அவர் கோபித்துக் கொண்டு பூங்குளத்துக்கே போய்விட்டார். பிறகு கல்யாணியும் அவளுடைய வயதான அத்தை ஒருத்தியும் அந்த வீட்டில் வசித்து வந்தார்கள். பண்ணைக் காரியங்கள் எல்லாம் எப்போதும் போலவே நடந்து வந்தன. காரியஸ்தர்கள் குடி படைகள் எல்லாரையும் கல்யாணி அடிக்கடி வீட்டுக்குத் தருவித்து நேரில் உத்தரவு இட்டு வந்தாள். அவர்கள் எல்லாரும் பண்ணையாரின் எதிர்பாராத மரணத்தினால் திகிலடைந்தவர்கள், இப்போது மிகவும் குதூகலத்துடன் தங்கள் வேலைகளைச் சரிவரச்செய்து வந்தார்கள்.

✻ ✻ ✻

ரத்தினம் பிள்ளைக்கு இதெல்லாம் ஒன்றுமே பிடிக்கவில்லை. அவனுடைய உத்தேசங்கள் எல்லாம் தவறிப்போயே வந்தன. ஆனாலும் அவன் நிராசை அடைந்துவிட வில்லை. பல தடவை அவன் தாமரை ஓடைப் பண்ணையின் வீட்டுக்குப் போய்த் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு ஆச்சியுடன் முக்கியமான விஷயங்கள் பேச வேண்டியிருக்கிறது என்று வேலைக்காரியிடம் சொல்லி அனுப்புவான். ஆச்சிக்கு உடம்பு சரியில்லை என்றும், ஏதாவது முக்கியமான விஷயம் இருந்தால் காரியஸ்தரிடம் தெரிவிக்கச் சொன்னதாகவும் வேலைக்காரி வந்து கூறுவாள்.

கடைசித்தடவை ரத்தினம் பிள்ளை அவ்வாறு வந்திருந்தபோது ஒரு விசேஷ சம்பவம் நடந்தது. பண்ணையாரின் வீட்டு வாசலில் எப்போதும் ஒரு நாய் கட்டியிருக்கும். அது உயர்ந்த ஜாதி நாய். பார்த்தால் சாது மாதிரி இருக்கும். குரைக்காது; யாரையும் அநாவசியமாகக் கடிக்காது. ஆனால் எஜமான் மட்டும் ஏவிவிட்டால் முழங்கால் சதையில் குறைந்தது ஒரு ராத்தல் சதை எடுத்துப் பட்சணம் செய்தாலொழிய அதற்குச் சரிக்கட்டி வராது.

அந்த நாய் வீட்டின் முன் ஹாலில் ஜன்னல் கம்பியில் அன்று சங்கிலியால் கட்டப்பட்டிருந்தது. ரத்தினம் பிள்ளை வாசல் அருகில் வந்ததும், அந்த ஜன்னலண்டை ஒரு பெண்ணின் கை தெரிந்தது. அது பொன் வளையல் அணிந்த அழகான கை; அந்தக் கை, நாயைக் கட்டியிருந்த சங்கிலியை அவிழ்த்து விட்டது. ''சூ!'' என்ற மெல்லிய சத்தமும் கேட்டது. அவ்வளவுதான். நாய் ஒரே ஒரு தடவை ''ளொள்'' என்று குரைத்து விட்டு, வாய்ப்பேச்சில் அதிக நம்பிக்கை இல்லாத வீரனைப் போல், புலிப்பட்டிப் பிள்ளைவாளின் மீது பாய்ந்தது. பிள்ளைவாள் ஓடினார். நாயும் பின் தொடர்ந்தது. சீக்கிரத்தில் அவருடைய கால் சட்டையை அது பற்றியது. ஒரு கடியில் சட்டையைக் கிழித்துச் சதையைக் கவ்விற்று. பிள்ளைவாள் மும்மடங்கு வேகமாய் ஓடினார். நாயும் அவருடைய முழங்கால்சதையை ருசி பார்த்துக் கொண்டே தொடர்ந்து ஓடிற்று. அவரைத் தெரு முனை வரையில் கொண்டு போய் வழியனுப்பிய பிறகுதான் திரும்பி வந்தது.




1986ம் ஆண்டு அகில உலக அமைதி ஆண்டாய்க் கொண்டாட வேண்டும் என ஐ. நா. சபையில் தீர்மானிக்கப் பட்டுள்ளது. அப்படியானால் அதற்கு முந்தைய ஆண்டுகள் சண்டை பூசல் ஆண்டுகள்தானோ?

தகவல்: சௌம்யா

துரத்தப்பட்டு ஓடுகிறவனிடம் சாதாரணமாய் அநுதாபம் உண்டாவது கிடையாது. இது மனித சுபாவம். இந்தச் சுபாவத்தை யொட்டி, புலிப்பட்டிப் பிள்ளைவாள் நாயினால் துரத்தப் பட்டு ஓடியபோது வீதியில் நின்றவர்கள் — பிள்ளைகள், பெரியவர்கள் கூட — சிரித்தார்கள். சில துஷ்டப் பிள்ளைகள் ''சூ! பிடி!'' என்று நாயை உற்சாகப்படுத்தினார்கள். நாயின் பல்லினால் பிள்ளைவாளுக்குக் காலிலே புண்ணும், ஊராருடைய சிரிப்பினால் அவருடைய உள்ளத்திலே புண்ணும் ஏற்பட்டன. கல்யாணியிடம் அவர் அளவிலாத துவேஷம் கொண்டார். எப்படியும் அவளைப் பழி வாங்குவதென்று தீர்மானித்தார்.

(தொடரும்)

# காரணம், குழந்தைகளின் விரைந்த முழுவளர்ச்சிக்கான அதிக ஊட்டச்சத்துள்ள திட உணவாகும் ஃபாரெக்ஸ்.

**உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்குத் தேவையான புரதச்சத்து நிரம்பியதாகும் ஃபாரெக்ஸ்.**

புரதச்சத்துப் பற்றுக்குறையிலிருந்து குழந்தையைப் பாதுகாப்பதற்கென்றே உலக உடல்நலக் கழகம் பிராண்டு செய்யப்பட்ட திட உணவுகளில் அடங்கி இருக்கவேண்டிய புரதச் சத்தின் அளவு பற்றி சில தர நிர்ணயங்கள் விதித்துள்ளது. சிபாரிசு செய்துள்ள முறையைப் பின்பற்றி ஃபாரெக்ஸ் திட உணவைத் தயாரித்து அளித்தால் அது உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு அத்தியாவசியமான புரதச்சத்து செறிந்ததாகும்.

**ஆரோக்கியமான இரத்தத்திற்கென கூடுதல் இரும்புச்சத்து அடங்கியதாகும் ஃபாரெக்ஸ்.**

"தாயிடமிருந்து ஏராளமான இரும்புச் சத்தைப் பெற்று குழந்தை பிறக்கிறது. பிறந்த பிறகு மெல்ல மெல்ல இரும்புச்சத்தின் அளவு குறையத் தொடங்குகிறது. பால் நல்ல உணவாக இருப்பினும், இரும்புச்சத்துப் பற்றுக்குறையினால் அது முழுமை யாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச்சத்து அடங்கிய திட உணவு தேவைப்படுகிறது."

—டாக்டர் சுபாஷ் C. ஆர்யா

குழந்தையின் இரத்தத்திற்கும், தொற்று நோய் எதிர்க்கும் சக்திக்கும், அவனது பொது ஆரோக்கியம் மற்றும் வளர்ச்சி இவற்றுக்குத் தேவை இரும்புச்சத்து. அதனால்தான் ஃபாரெக்ஸில் வேறு எந்த பிராண்டு செய்யப்பட்ட திட உணவைக் காட்டிலும் அதிக இரும்புச்சத்து அடங்கியுள்ளது.

**உங்கள் குழந்தையின் பற்களுக்கும் எலும்புகளுக்கும் அத்தியாவசியமான கால்ஷியம் மற்றும் ஃபாஸ்ஃபரஸ் சரியான விகிதத்தில் அடங்கியுள்ளதாகும் ஃபாரெக்ஸ்.**

உங்கள் குழந்தையின் பற்கள் மற்றும் எலும்புகளின் சீரான வளர்ச்சிக்குத் தேவை கால்ஷியம் மற்றும் ஃபாஸ்ஃபரஸ். ஆனால் 2:1 என்னும் விகிதத்தில் இவை ஒன்று சேர்ந்திருந்தால்தான் குழந்தைக்கு மிகச்சிறந்த பயனளிக்கும். இந்த இரண்டு அத்தியாவசியமான உட்பொருள்களும் உன்னதமான விகிதத்தில் அடங்கியதாகும் ஃபாரெக்ஸ். அது உங்கள் குழந்தை மிக ஆரோக்கியமான எலும்புகளையும் மிக திடமான பற்களையும் பெறுவதை உறுதி செய்கிறது.

**தவிர, ஃபாரெக்ஸ் எளிதில் செரிக்கக்கூடியதாகும்.**

குழந்தையின் மென்மையான செரிக்கும் சக்திக்கேற்றவாறு விசேடமாக முன்கூட்டியே பக்குவம் செய்யப்பட்டதாகும் ஃபாரெக்ஸ்.






டாக்டர்கள் சிபாரிசு செய்வது

## ஃபாரெக்ஸ்®

வழங்குவோர் க்ளாக்ஸோ

CASGLF-39-206 TAM

# டிவைடர்



குறுநாவல்

## 1962

'பாவாஜி வணிகக் கல்லூரி' தோடித் தெருவில் ஒரு மஞ்சள் கட்டிடத்தின் முதல் மாடியில் நீள போர்டுடன் 'கிடிக்டிக் இடிக் இடிக்' சப்தங்களுடன் கலகலப்பாக இயங்கியது.

தட்டச்சு, சுருக்கெழுத்துப் பயில, பாவாடை சோளி அரைத்தாவணி அணிந்து, பவுடர் பூசிய பெண்களும், காலோடு ஒட்டிய 'டைட் பாண்ட்' அணிந்த இளைஞர்களும் பகலெல்லாம் மாடிப் படியில் ஏறுவதும் இறங்குவதுமாக இருந்தனர். அவர்களில் கலா ஒருத்தி.

அவளுடைய முழுப் பெயர் கலாவதி. சிவப்பாக ஒல்லியாக ஒட்டடைக் குச்சியாக வளர்ந்து கருவிழிகளை இருட்டுக் குளங்களாக வைத்திருந்தாள். தன்னுடைய பி.ஏ. பட்டமளிப்புப் புகைப்படத்தை வீட்டுச் சுவரில் தொங்க விட்டு அழகு பார்த்து விட்டு, கடந்த மூன்று ஆண்டுகளாகப் பொங்கல் சமயத்தில் கழற்றித் தூசி தட்டிப் பாச்சை, பல்லி அசிங்கங்களை ஈரத் துணியால் அகற்றிவிட்டுப் பழையபடி மாட்டிக் கொண்டிருந்தாள்.

'தேவை' விளம்பரங்களைப் பார்த்து வேலைக்கு மனு எழுதிப் போடுவதற்காக அவளுடைய அண்ணா ஸ்ரீதர் வீட்டுக் கூடத்தில் தினமும் 'ஹிந்து' பத்திரிகையைப் போடச் சொல்லி யிருந்தான். அண்ணி மாதா மாதம் பழைய பேப்பர்களை விற்று அண்ணனுக்குத் தெரியாமல் சீட்டுக் கட்டி, போன தீபாவளி சமயம் பட்டுப் புடவை வாங்கிக் கட்டிக் கொண்டாள். கலாவிடம் மிகவும் அன்பாக, ''உன் முகரைக்கு எவன்டி வேலை குடுப்பான்'' என்றாள். வெண்கலச் செம்பிலிருந்து நாலாவது தம்ளர் காப்பி



யையும் ஊற்றித் தொண்டைக்குள் கொட்டிக் கொண்டு ''நாளைலேர்ந்து பேப்பர் போட வேண்டாம்னு சொல்லிட்டேன். இதைக் கொண்டு போயிக் கழுவி வை'' என்றாள். ஸ்ரீதர் ஓசை எழுப்பாமல் கறிகாய் வாங்க பிளாஸ்டிக் கூடையுடன் லுங்கியை மடித்துக் கட்டிக்கொண்டு நழுவினான்.

தட்டச்சும் சுருக்கெழுத்தும் கற்றுக் கொள்ளா விட்டால் இந்த உலகத்தில் ஒரு பெண் வாழவே முடியாது என்று பழைய பள்ளித் தோழி அனுராதா காரணீஸ்வரர் பிராகாரத்தில் அர்ச்சனைத் தட்டுடன் மிரட்டியதால், கலா விடிந்தும் விடியாததுமாக வெள்ளைக் காகிதத்தைச் சுருட்டிப் பிடித்துக் கொண்டு பாலாஜிக்குப் படியேற ஆரம்பித்திருந்தாள்.

பாலாஜி கல்லூரிக்குக் கீழே 'மூர்த்தி டெய்லர்ஸ்' இருந்தது. முதலாளி எஸ்.எஸ்.எல்.சி.யில் மூன்று தடவை வெற்றிகரமாகத் தவறினவன். மாநிறத்தில் 'பன்' கன்னங்களுடன் சதுரமாக இருந்தான். வேட்டி, அரை ஸ்லாக். ஏறத்தாழ மொட்டை போட்ட மாதிரி முடியை ஒட்ட வெட்டி மூக்கிற்குக் கீழே அரும்பு மீசை செதுக்கியிருந்தான்.

கலா பருமனான ஒற்றைப் பின்னலை வலது தோள் வழியே மார்பில் வழியவிட்டுத் தேவதை போலப் படி இறங்கும் நளினத்தைக் காண்பதற்காக எட்டரைக்கு மேல் எட்டே முக்காலுக்குள் குறைந்தது பதினைந்து தடவையாவது இருப்புக் கொள்ளாமல் அளவெடுக்கும் டேப்பை மாலை போட்டுக் கொண்டு வாசலுக்கும் கட்டிங் டேபிளுக்குமாக நடந்து கொண்டிருப்பான்.

ஏதாவது காரணத்தால் கலா வரவில்லையென்றால் ஒரு பாவமும் அறியாத காஜா எடுக்கும் பையனைப் பகல் முழுக்கத் திட்டித் தீர்ப்பான்.

ஒரு நாள் மாடிப் படியில் வழியை அடைத்துக் கொண்டு நான்கு வேலையில்லாத இளைஞர்கள் சிவாஜி, எம். ஜி. ஆர். படங்களைப் பற்றி விவாதத்தைத் தொடங்கினர். அவர்களுடைய விவாதம் அரை மணி நேரத்தில் சூடு பிடித்தது. ஒருவனின்

**சவிதா**

காலரை மற்றவன் கைப்பற்ற, படியிறங்கி வந்த கலா வழி கிடைக்காமல் அச்சத்துடன் தயங்கி நிற்க, மூர்த்தி அவர்கள் மீது பாய்ந்தான். விலக்கித் தள்ளினான். கலா இறங்கிச் செல்ல வழி அமைத்துக் கொடுத்துவிட்டு, ''எவன் எப்படி நடிச்சா உங்களுக்கு என்னடா, அவன் வெச்சம் வெச்சமா வாங்கிக்கிட்டுப் போறான், போயி பொளப்பத் தன்னப் பாப்பீங்களா'' என்று கலாவின் முதுகுக்குக் கேட்கும்படியாக இரைந்தான். கலா அன்றுதான் முதல் தடவையாக மூர்த்தியைப் பார்த்தாள்.

ஒரு வாரத்துக்குப் பின் ஒரு ஆரஞ்சு நிற சோளித் துணியைத் தைக்கக் கொடுக்க கலா அவனுடைய கடைக்குள்ளே காலடி எடுத்து வைத்தாள். மூர்த்தியின் தையல் அவளைக் கவர்ந்தது. அவனுடைய கண்ணியமான வார்த்தைகள் அவளுடைய இருதயத்தில் வண்ணக் கோலங்களை வரைந்தன.

மூன்று மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள், மூர்த்தி தைத்த நாலாவது சோளியைக் கலா அணிந்து கொண்டு தட்டச்சுப் பழகக்

னைம்பினான். ''என்னடீ, வாரா வாரம் புதுசு புதுசாத் தைச்சுக்கிட்டிருக்கியா, உங் கொண்ணன் வாங்கற நொள்ளைச் சம்பளம் எங்க போகுதுன்னு இப்பத்தான் தெரியுது'' என்று அண்ணி வாழ்த்துத் தெரிவித்தாள்.

அன்று இரவில் ஜன்னலோரம் படுத்திருந்த கலா நள்ளிரவு வரை உறங்காமல் நட்சத்திர வானத்தைப் பார்த்தாள். தன்னுடைய புத்தகப் படிப்பை விட மூர்த்தியின் தையல் கலை உயர்ந்ததாகப் பட்டது. அந்த நொடியில் மூர்த்திதான் தன்னுடைய 'மிஸ்டர் ரைட்' என்று தீர்மானித்தாள்.

மறுநாள் அவள் பாலாஜியிலிருந்து படியிறங்கியபோது கடை வாசலில் அவள் தரிசனத்துக்காக ஏக்கத்தோடு காத்து நின்ற மூர்த்தியைப் பார்த்து முதல் முதலாகப் புன்னகை செய்தாள். அவன் பதிலுக்குப் புன்னகை செய்தான். அவள் நெஞ்சில் கோடிக் கணக்கில் பூந்தோட்டங்கள் விரிய, வான வில்லின் முதுகின் மேல் சவாரி செய்தாள்.

அந்த ஒப்பற்ற கணத்தைக் கலா மறக்க விரும்பவில்லை. சமயம் கிடைத்தபோதெல்லாம் அந்த இனிய தொடக்கத்தைத் திரும்பத் திரும்ப நினைவுக்கு இழுத்து வந்து மாற்றுக் குறையாத 'த்ரில்'லில் திளைத்தாள்.

## 1967

அமைதி சாம்பல் நிறத்தில் படர்ந்திருக்கும் வைகறை நேரம்.

மார்கழியின் வானம் கடும் பனியைக் கவிழ்த்தது.

சைதாப்பேட்டை, கதவுகளை இறுகச் சாத்திக் கொண்டு உறங்கிக் கொண்டிருந்தது.

சுப்ரமணிய சுவாமி கோவிலின் ஒலிபெருக்கிகளிலிருந்து திடீரென்று நாதஸ்வர பூபாளம் வெடித்துப் பரவியது. தூரத்துப் பெருமாள் கோவிலில் இருந்து, 'கௌஸல்யா ஸுப்ரஜா ராமா'.

''இவ்வளவு புகழ் பெற்ற பிறகும் இந்தப் பாகவதர் ஏன் நாலு மணிக் கச்சேரி செஞ்சிண்டு இருக்கார்?''

''அவருக்குச் சின்ன வயசிலேருந்தே இருட்டுன்னு ஒரே பயம்!''

— கே. ஆர். எம்.

அ

அச்சம்



கண்ணாம்பு உதிர்ந்த ஒரு பழைய வீட்டின் முன் போர்ஷனில் கலா உறக்கம் கலைந்து இழிந்த பாயிலிருந்து எழுந்தாள். இருளுக்குள் உத்தேசமாக மூன்று எட்டு எடுத்து வைத்தாள். கரத்தை இங்குமங்கும் வீசி மின் விசையைத் தட்டி விளக்கேற்றினாள். இடுப்புப் பக்கங்களில் 'விண் விண்' என்று தெறிக்க ஆரம்பிக்கவே, 'ஸ்ஸ்ஆ' என்று இடுப்பைப் பிடித்துக் கொண்டு பழையபடி பாய்க்கு வந்தாள். வலி சிறிது விலகி மறுபடியும் உக்கிரத்துடன் தாக்கவே 'ஆ ஐயோ அம்மா' என்று அரற்றத் தொடங்கினாள்.

அவளுடைய கணவன் மூர்த்தி பக்கத்துப் போர்ஷனைப் 'படபட'வென்று தட்டினான். அவனிடம் பயம், கிளர்ச்சி, பரபரப்பு. இரவு பகல் என்று பாராமல் கடகடவென்று தையல் மிஷின் ஓடியும் தேவை நேரத்தில் ஒட்டாண்டியாக நிற்கிறோமே என்ற வயிற்றெரிச்சல்.

சுவாமிநாதன் கம்பிக் கதவைத் திறந்து, அவரிடமிருந்த பத்து ரூபாயை மனத்தோடு வழங்கினார். ரிக்ஷாவுக்கு அது போதும் என்று மூர்த்தி வாங்கிக் கொண்டான்.

''நீங்க அழைச்சிக்கிட்டுப் போங்கோ. வொய்ஃபைப் பின்னாடி அனுப்பறேன்'' என்றார் சுவாமிநாதன்..

''தம்பைய ரெட்டி தெருவில கடைசில இருக்கு.''

''தெரியும். பசங்களை ஸ்கூலுக்கு ரெடி பண்ணிட்டு அவ வந்துடுவா.''

வேதனை தாளாமல் கலா உருண்டாள். ''செலவுக்கு... ஆ....செலவுக்கு என்ன பண்ணப் போறீங்க... ஸ்ஸ்ஸ்?''

''அதைப் பத்தி நீயேண்டி கவலைப்படறே? இந்த ரெண்டுபுடவை போதுமா,வேறஏதுவும் எடுத்துக்கணுமா?''

''அந்தப் பைக்குள்ள....''

''பைக்குள்ள என்ன இருக்கு?''

''பழைய துணி கிழிச்சு வெச்சிருக்கேன். அதையும் ஃபிளாஸ்கையும் எடுத்துக் கோங்க... இந்தாங்க.''

தாலிக் கயிற்றுக்குத் துணையாக அவள் கழுத்தில் தொங்கிய மெல்லிய ஒரு பவுன் சங்கிலியைக் கழற்றி அவனிடம் நீட்டினாள்.

''வேண்டாம். அதைக் கழுத்துல போட்டுக்கோ.''

''பணம் வந்துட்டா மீட்டுக்கலாம்... எடுத்துக்கோங்க'' பாயில் வைத்தாள்.

''மொதல்ல . இதக் குடிச்சுடும்மா'' என்று உள்ளே வந்த சுவாமிநாதனின் மனைவி கிண்ணத்தை நீட்டினாள். அதில் அவசரமாகத் தயாரித்த கஷாயம்.

கலா வாங்கிக் குடித்தாள். அதில் மிதந்த வெண்ணெய் குமட்டியது. வலி 'சுளீர் சுளீர்' என்று அதிகரித்தது.

கீழ் வானம் வெளுத்துக் கொண்டிருந்த வேளையில் ரிக்ஷா தெரு முனையைக் கடந்தது.

பனி அலை மூர்த்தியைக் குதறிய நேரத்தில் கலாவின் நெற்றியில் வியர்த்து வழிந்தது. புடவையை இழுத்துப் போர்த்திக் கொண்டு விழிகளை மூடி, 'அம்மா, அம்மா' என்ற இடைவிடாத முனகலுடன் அவள்

மீது படர்ந்திருந்தாள். அந்த வேதனை நேரத்தில் அவள் மனம், 'இந்தக் குழந்தை யையாவது கொடு' என்று வாடிக் கையாக அவள் நம்பி வந்த தெய்வங்களை வேண்டியது.

குருசக்தி விநாயகரை ரிக்ஷா கடந்த போது, 'உம்பேரைத்தான் வைப்பேன், பிறக்கறது ஆணு இருந்தா' என்று மூர்த்தி யின் மனம் விநாயகரிடம் உறுதியளித்தது. இலவச பிரசவ மருத்துவ மனை நெருங்க நெருங்க மூர்த்தியை அவநம்பிக்கை விழுங்க ஆரம்பித்தது.

கலாவின் அண்ணு அண்ணி ஒப்புதலோடு தான் அவர்கள் திருமணம் நடந்தது. நகையோ வரதட்சணையோ சீர் வரிசையோ மூர்த்தி கேட்காததினுல் சுமை நீங்கினுல் சரி என்று அண்ணி பலமாகத் தலையசைத்தாள். அண்ணன் நாயாய் அலைந்து நகரிலேயே குறைந்த வாடகையில் ஒரு கல்யாணச் சத் திரத்தைக் கோடவுன் தெருவின் சந்தடி களுக்கிடையே கண்டு பிடித்தான்.

கல்யாணம் முடிந்த மறுவாரம் அண் ணுவை விஜயவாடாவில் உள்ள தலைமை அலுவலகத்துக்கு மாற்றி விட்டார்கள். நகர்ந்து கொண்டிருந்த கல்கத்தா மெயி லின் ஜன்னல் வழியாக அண்ணி சந்தோஷ மாக 'டாடா' காட்டினுள். அப்புறம் கலா வின் வாழ்க்கையில் இரவுகளும் பகல்களும் இல்லை. மூர்த்தி மட்டுமே இருந்தான்.

மூர்த்தி அறுபது ரூபாய் வாடகையில் சுப்ரமண்யசுவாமி கோயிலுக்கு எதிரில் ஒரு போர்ஷனைப் பிடித்தான். கலா தன் னுடைய விருப்பங்களை ஒடுக்கிக் கொண்டு அவனுல் முடிந்ததை மட்டும் வாங்கித் தரும் படி கேட்டாள். கேட்டவை கிடைத்தன, குழந்தையின் அழுகைச் சத்தத்தைத் தவிர.

கலா குழந்தைக்காக ஏங்கினுள். ஆண் பிள்ளை வேண்டும் என்று சுந்தர காண்டம் படித்தாள். ஒவ்வொரு காலையும் குளித்து ஈரத் தலையுடன் ஸ்வாமி படங்களுக்குக் கைகூப்பி, எனக்காக இல்லாட்டியும் அவ ரோட நல்ல குணத்துக்காக ஒரு குழந்தை யைக் குடு' என்று தணிந்த குரலில் கேட் பாள். அப்போது தற்செயலாகப் பக்கத்தில் வரும் மூர்த்தி 'எனக்காக இல்லாட்டியும் என் பெண்டாட்டியோட சுத்தமான மனசுக் காகவாவது ஒரு குழந்தையைக் குடு" என்று வேடிக்கையாகச் சொல்லுவான். பின்பக்க மிருந்து அவளைக் கட்டிக் கொள்ளுவான். ''விடுங்க. பூஜை நேரத்தில என்ன இதெல்லாம்.''

ஒரு குழந்தை ஆறுவது மாதத்தில் இறந்து பிறந்தது. இரண்டு வருடங்களுக்குப் பிறகு அடுத்த குழந்தை ஏழாவது மாதத்தில் பிறந்து இறந்தது. கலா மெலிந்து ரத்த மில்லாமல்மேலும் வெளுத்துத் தோன்றினுள்.

'குழந்தைக்காகக் கலா அவசரப்படவேண் டாம். முதல்ல ஹெல்த் இம்ப்ரூவ் ஆகணும்' என்று டாக்டர் திருமதி உமா பரமேஸ்வரன் வழங்கிய அறிவுரையை நள்ளிரவுகளில் மட் டும் இருவரும் மறந்ததால் கலாவதி இப் போது கர்ப்பவதி.

பொங்கல் சமயம் நிறைய வேலை வரும். பணத்தை வளமாகக் கையில் வைத்துக்-கொண்டு நல்ல நர்ஸிங்ஹோமில் கலாவைச் சேர்க்க வேண்டும் என்று மூர்த்தி தீர்மானித் திருந்தான். லேடி டாக்டர் உத்தேசமாகச் சொன்ன தேதிக்கு இரண்டு வாரங்களுக்கு முன்னதாக இப்படி வலி வரும் என்று அவன் எண்ணவில்லை. இதுவும் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போய்விடுமோ?

ஸ்ட்ரெச்சரில் வார்டுக்குள் பயணம்செய்த கலா லேபர் மேஜையின் மீது செலுத்தப் பட்டாள். அவளுடைய முனகல் கூச்சலாக மாற, சிவப்புப் புடவை உடுத்திய மருத்து வச்சி ''கத்தாதம்மா'' என்று அதட்டினுள்.

இந்த வியர்வைக்கும் வேதனைக்கும் நிச்ச யம் இம்முறை பலன் கிடைக்கும் என்று கலாவின் அடி மனத்தில் மகிழ்ச்சி கலந்த நம்பிக்கை.





''இந்தத் தூக்குத் தண்டனைக் கைதி யின் கடைசி ஆசையை இந்த ஜன்மத் திலே தீர்க்க முடியாது போலிருக்கே!''

''அப்படி என்ன ஆசை?''

''ஓரேஒரு முறை பஞ்சாயத்துத் தேர் தலைப் பார்க்கணுமாம்!''

-ஆர். ஜெயசங்கர்,

லேடி டாக்டர் வந்து பரிசோதித்துப் பார்த்துவிட்டு வயதான நர்ஸிடம் ஆங்கிலத் திலும் தமிழிலும் சொல்லிவிட்டு வெளியேறி னுள். மயக்கத்தை வரவழைத்து ஃபோர் ஸெப்ஸ் போட்டு குழந்தையை எடுக்கப்போகி றார்கள் என்று கலா ஊகித்தாள். எப்படி வேண்டுமானுலும் எடுங்கள். என் குழந் தையை மட்டும் பூப்போலப் பத்திரமாக எடுத்து என்னிடம் கொடுங்கள்.

வராந்தாப் பெஞ்சில் மூர்த்தி உட்கார்ந் தான்.எழுந்தான். உட்கார்ந்தான். குட்டி போட்ட பூனையாக உலாவினுன். சாலைக்கு மறுபுறம் தெரிந்த நாயர் கடைக்கு நடந் தான். ஒரு டீ சாப்பிட்டான். பிளாஸ்க் நிறைய காப்பி பிடித்துக் கொண்டு மறு படியும் வராந்தாவுக்கு வந்தான்.

''நல்ல நேரத்திலே கொண்டு வந்து சேர்த்திங்க. ஆண்குழந்தை'' என்று சொல்

பாயும் புலியாக ரஜினி நடிக்கும்




**S.P. முத்துராமன்**

பஞ்சு அருணாசலம்

இளையராஜா வாலி பாபு

விட்டல் சலம் சாரதி

புலியூர் சரோஜா ரத்தினம்

**AVM PRODUCTIONS**

**எம்.குமரன் எம்.சரவணன் எம்.பாலசுப்ரமணியன்**

விக்கொண்டே மருத்துவச்சி வராந்தாவில் ஓடினான்.

அதுக்குள்ள பிறந்திருச்சா!

மத்தியானம் பதினொரு மணிக்குக் கலா கண் விழித்துப் பார்த்தபோது மூர்த்தியும் சுவாமிநாதனின் மனைவியும் கட்டிலருகே முகம் மலர்ந்து நின்றனர்.

''இந்தாம்மா, உன் குழந்தையைப் பாரு ஆண் குழந்தை'' என்று நர்ஸ் பக்கத்துத் தொட்டிலுக்குள்ளிருந்து துணிகளோடு பட்டு ரோஜாக் குவியலை அள்ளினாள்.

சுருட்டையாகத் தலைமயிர். சின்னச் சின்னக் கண்களைச் சிக்கென்று மூடிக் கொண்டிருந்தது. பிஞ்சுக் கரத்தில் டி-7 என்ற அலுமினிய டோக்கன் கட்டப்பட்டிருந்தது.

கலா அந்த விநாடியில் அந்த நர்ஸை நேசித்தாள்: அந்த விநாடியை நேசித்தாள். அவளுடைய வாழ்க்கையின் மிகவும் அபூர்வமான விநாடிகளில் அதுவும் ஒன்றாகிவிட்டது.

## 1971

**வெ**ய்யில் புதிய வெப்பத்தை அசோக் நகருக்கு அறிமுகம் செய்யும் முற்பகல்.

ஒரு அகல காந்தி காலத்து பங்களாவின் முதுகுக்குப் பின்னே, அவுட் ஹவுஸ் தாழ்வு மனப்பான்மையுடன் நாரத்தை, கொய்யா கறிவேப்பிலை மரங்களுக்கு இடையே பம்மியிருந்தது. ஒரு காக்கையின் கர்ர்ர்.

அவுட் ஹவுஸில் இரண்டே அறைகள். ஒன்று சிறியது. இன்னொன்று மிகச் சிறியது.

மிகச் சிறிய அறைக்குள்ளே சீரகம் பெருங்காயத்துடன் பருப்புக் கொதித்து வாசனை எழுப்பிக் கொண்டிருந்தது. பக்கத்து அறையில் அஷ்ட லட்சுமி, ராமர் பட்டாபிஷேகப் படங்கள் போன வாரத்து இருவாட்சி சருகுடன் சுவரில் வீற்றிருந்தன.

கீழே கலா சிமெண்ட் தரையில் உட்கார்ந்து உரக்கப் பாடம் சொல்லிக்கொடுத்துக்கொண்டிருந்தாள்.

கணவன்: ஏன் அழுதுண்டு இருக்கே?
மனைவி: உங்களுக்குப் பிரியமா நான் செஞ்ச ரவா கேசரி பூராவையும் நம்ம நாய் தின்னுடுத்து.
கணவன்: போனாப் போறது. வேற நாய் வாங்கிண்டாப் போச்சு!''

— சிவசக்தி.

இ
இருக்கன்



''வலையில் எலி வசிக்கிறது.
வலையில் சிலந்தி இருக்கிறது
கூட்டில் பறவை உறங்குகிறது
வீட்டில் மனிதன் வாழ்கிறான்.''

அரக்கு நிற இரண்டங்குலக் கரையுள்ள பச்சை நூல் புடவை உடுத்திச் சாதாரண ஜாக்கெட் அணிந்திருந்தாள். ஒரு சுற்று வற்றியிருந்ததால் கன்னத்து எலும்புகள் முகத்தில் தலையெடுத்திருந்தன. சக்கையான அரை வயிற்றுச் சாப்பாட்டினால் விழிகளைச் சுற்றிக் கருமை. கழுத்தில் எண்ணெய் ஏறி மஞ்சள் நிறம் மங்கிப்போன கயிறு. காதில் ஃபான்ஸி ஜுவல்லரி தோடுகளின் 22 காரட் பாசாங்கு.

கலாவின் தோற்றத்தில் வறுமை தெளிவாக அச்சிடப்பட்டிருந்த போதிலும் முகத்தில் திருப்தியும் நம்பிக்கையும் மிச்சமிருந்தன. ஒற்றைப் பின்னல் மாலையான உற்சாகத்துடன் வலது தோள் வழியே மார்புப் பிரதேசத்தில் பாய்ந்து மடியை நோக்கி இறங்கியது.

மடியில் கணேஷ் உட்கார்ந்திருந்தான். அவனுடைய சிவப்பு நிறத்தில், மூர்த்தியின் 'பன்' கன்னங்களுடன். பாடப் புத்தகத்திலிருந்த எலி, சிலந்தி பறவை படங்களுக்குக் கீழே இருந்த ஆண் முகத்தைத் தளிர் விரலால் தொட்டு ''அப்...பா'' என்றான்.

''இதான் அப்பாவா!'' என்று கலா சிரித்தாள். ''ஏண்டா கண்ணு அப்பா இவ்வளவு அசிங்கமாவா இருக்கார் பெரிய மீசை வெச்சுக்கிட்டு?''

கணேஷ் 'ஆமாம்' என்பது போலத் தலையை வானத்துக்கும் பூமிக்குமாக அசைத்தான். மூர்த்தி தன்னைப் போலவே தன் மகனுக்கு முடியை ஒட்டக் கத்தரித்து விட்டிருந்தான்.

''அவர் காலாகாலத்துல வீட்டுக்குள்ள வந்தாத்தானே அவர் எப்படி இருப்பார்னு உனக்குத் தெரியும்'' என்றாள். அவனைக் கீழே இறக்கி உட்கார வைத்துவிட்டு எழுந்தாள். ''ராத்திரி பன்னிரண்டு மணிக்கு அவர் வர்றதுக்குள்ள நீ தூங்கிர்ற. காத்தால நீ எழுந்திருக்கிறதுக்குள்ள அவர் கிளம்பிப் போயிர்றார். ஏன்தான் உங்கப்பா இப்படி சினிமாப் பைத்தியம் புடிச்சி அலையறாரோ'' என்றாள். சாதத்தைப் பருப்பைப் போட்டு நெய் ஜாடியில் மிச்சமிருந்த நெய்யை வழித்துப் போட்டுப் பிசைந்தாள். ''நாளைக்கு நெய் இல்லை'' என்று கணேஷைப் பார்த்து அறிவித்தாள்.

கணேஷ் பிறந்த பிறகு ஒரு நாள் மூர்த்திக்குத் திடீரென்று ஞானோதயம் ஏற்பட்டு, பணத்தின் அவசியத்தைப் பூரணமாக உணர்ந்தான். சைதாப்பேட்டை வீட்டில் ஒரு மத்தியானம் பாயில் புரண்டு கொண்டிருந்தபோது கலாவிடம், ''பணத்தை நெறையச் சேர்த்து எல்லாரும் பெருமைப் படற மாதிரி வாழணும்டீ'' என்றான்.

அதற்குக் கலா, ''எல்லாரும் மதிக்கிற மாதிரி வாழணும்னு சொல்லுங்க. அடுத்தவங்களோட பொறாமையும், வயித்தெரிச்சலும் நமக்கு எதுக்குங்க'' என்று திருத்தினாள்.

''சைதாப்பேட்டை நமக்கு ராசியில்லடீ''

மனத்தில் கனவுகளை வரிசை வரிசையாக அடுக்கிக் கொண்டு அசோக்நகர் அவுட் ஹவுசுக்கு வந்தார்கள். மூர்த்தி சைதாப் பேட்டைக் கடையையும் காலி செய்து விட்டான்.

வங்கி உதவியுடன் மூன்று புது மிஷின்கள் வாங்கிப் போட்டு வெப்பேரியின் சுறுசுறுப் பான பகுதியில் 'ஃபாஷன்' என்று போர்டு அடித்து, கண்ணாடி, ஷோக்கேஸ் அமைத்துப் பெரிய கடையாக ஆரம்பித்தான். கடுமை யாக உழைத்தான். மாணவ மாணவிக ளிடையே அவனுடைய ஃபாஷன் ஒரே வரு டத்தில் செல்வாக்கைப் பெற்றது. சில்லறை அவனிடம் தாராளமாக விளையாட ஆரம் பித்தது. கலாவின் உடம்பில் தங்கம் பல இடங்களில் மினுமினுத்தது. கடைக்குத் தொலைபேசி வைத்து 'குட்மார்னிங் ஃபாஷன்' என்று இரவு பன்னிரண்டு வரை பேசினான்.

உஸ்மான் ரோடில் கணேஷுக்கு மோதிர மும் ரங்கநாதன் தெருவில் எவர்சில்வர் தேக்சாவும் வாங்கிக் கொண்டு ஆட்டோ வில் வந்து மழைக்குள் இறங்கி வீட்டுக்குள் ஓடியபோது, ''வீடு ராசியான வீடுதாங்க'' என்று கலா ஒப்புக் கொண்டாள். பிரச்னை இல்லாத மாதங்கள் வழுக்கிக் கொண்டு ஓடின.

மப்பும் மந்தாரமுமான ஒரு பகல் வேளை யில் மூர்த்தி ஒரு அந்நியனை வீட்டுக்கு அழைத்து வந்தான். அவன் கருப்புக் கண் ணாடியால் கண்களை மறைத்திருந்தான். நெஞ்சில் பூப்போட்ட ஜிப்பா அணிந் திருந்தான். காப்பி ஏந்தி வந்த கலாவிடம், ''ஞானசூரியன்'', என்னோட கிளாஸ்மேட் சீக்கிரத்திலே புரொட்யூசர் ஆகப் போகி றான்'' என்று மூர்த்தி அறிமுகப்படுத்தினான்.

கலாவுக்கு அவன் அதிகப்படியான மரி யாதையுடன் சற்றே எழுந்து வணக்கம் செலுத்தினான். அவனிடமிருந்து பரவிய செண்ட் நெடி கலாவுக்குத் தலைவலியை ஏற்படுத்தியது. காப்பி குடித்த மறுவிநாடி ஞானசூரியன், ''கிளம்பலாமா மூர்த்தி. பைனான்ஷியரை இன்னிக்கு எப்படியாவது புடிச்சிடணும்'' என்றான்.

ஞானசூரியனின் சூரியன் ஆர்ட்ஸ் புரொ டக்ஷன் முதல் தயாரிப்புக்காக ஃபைனான்ஸ் தேடி மூர்த்தி அவனோடு ஆட்டோ விலும் டாக்ஸியிலும் சுற்றினான். கலா எப்போது கேட்டாலும் மூர்த்தி அகப்பட மாட்டான். ''சூரியன் சாரோட வெளிய போயிருக்கார்மா'' என்று கடைப் பையன் களின் பதில் வரும்.

துணிகளைக் கத்தரித்துப் பையன்களிடம் தைப்பதற்காக எறிந்துவிட்டு, ஞானசூரிய னோடு கடைக்கு வெளியே மூர்த்தி பொழு தைக் கழித்தான். ஆரம்பத்தில் சூரியன் சார் ஜிப்பா பையிலிருந்து நூறு ரூபாய்த் தானாக எடுத்துக் காண்பித்தார். அப் புறம் மெள்ள மெள்ள ஆட்டோ, டாக்ஸி, சாப்பாட்டு வகையறாவுக்கு மூர்த்தியின் தலையைத் தடவ ஆரம்பித்தார்.

மூர்த்தி மணி பர்சைக் காலி செய்துவிட்டு விடியற்காலை இரண்டு மணிக்கு ஓசைப்



''நடிகை ஸ்ரீலஸ்ரீ நேத்து ஷூட்டிங் கில் குதிரை மேல் ஏறத் தெரியாமல் ஏறப்போக கால் உடைஞ்சு போச்சு!''
''அடப் பாவமே? எந்தக் கால்?''
''வலது முன்னங்கால்!''

- ஜ. சந்தானம்

படாமல் வீட்டுக்குள் வந்து, ''ஞானசூரியன் சாப்பாடு வாங்கிக் குடுத்திட்டான்'' என்று பொய் சொல்லுவான். ''சாதத்தில தண்ணி ஊத்திடு'' என்பாள். கலா அடிக்கடி அவ னுக்கு ஒத்துக்கொள்ளாத பழையதைச் சாப்பிட்டு ஜலதோஷத்தால் அவஸ்தைப் பட்டாள்.

காலையில் முக க்ஷவரத்துக்காகக் கழுத்தில் நுரையைத் தேய்த்துக் கொண்டிருந்த மூர்த்தி ''இன்னிக்கு மட்டும் குட்டீ, நூறுக்கு மேலே வேண்டாம். போய் ட்ரா பண் ணிட்டு வா'' என்றான்.

''அங்க என்ன லட்ச ரூபாயா இருக்குது. குடுத்ததை யெல்லாம்தான் கொஞ்சம் கொஞ்சமாப் புடுங்கிட்டீங்களே.''

''பைனான்ஸ் அமைஞ்சிருச்சின்னு சூரியன் எல்லாத்தையும் வட்டியும் முதலுமாத் திருப்பித் தந்துடுவான். அவன் ஜெண்டில் மேன்டீ''.

''ஒரு வருஷமா இப்படித்தான் சொல்லிக் கிட்டிருக்கீங்க. தெரியாமத்தான் கேக்க றேன், காப்பிக்குக் கூட வழியில்லாத உங்க ஃப்ரெண்ட் எப்படிங்க படம் எடுக்கப் போறார்?''

''வெறுங்கைதான்டீ சினிமாவில முழம் போடும். பணம் வெச்சிருக்கிறவன் கூட சொந்தப் பணத்தை இறக்க மாட்டான். ஃபைனான்ஷியர்கிட்ட வாங்கித்தான் படம் எடுப்பான். அதெல்லாம் உனக்குப் புரியாது. நான் குளிச்சுப் புறப்படறதுக்குள்ள போயி பணத்தை எடுத்துட்டு வா.''

''ம்ஹூம். மாட்டேன். இனிமே அதில கைவெச்சா கணேஷுக்கு சைக்கிள் வாங்க முடியாது. அடுத்த வாரம் அவனுக்குப் பிறந்த நாள். ஞாபகம் வச்சுக்கோங்க.''

''சைக்கிள் என்னடீ பெரிய சைக்கிள். அவனோட அடுத்த பிறந்த நாளுக்கு காரே வாங்கிருவோம். கவலைப்படாதே போ.''

கணேஷுக்கு மூணு சக்கர சைக்கிள் வாங்குவதற்காக மூர்த்தியிடம் சொல்லாமல் கலா இரவில் பால் குடிப்பதை நிறுத்தி அந்தப் பணத்தை வங்கியில் சேர்த்து வைத்

திருந்தாள். அந்தப் பணமெல்லாம் பறி போய்விடவே கலா மேலும் ஆறு மாதம் வாயைக் கட்டி, வயிற்றைக் கட்டித் தன்னை ஒடுக்கி, நினைத்தபடியே மூனு சக்கர சைக்கிள் வாங்கி விட்டாள்.

ஒரு நாள் விடியும் நேரத்தில் ஞான சூரியன் பாடல் பதிவுடன் படத்துக்குப் பூஜை போட்டான். அழைப்பிதழில் புழுதியில்பூத்த மலர், கதை,திரைக் கதை,வசனம், டைரக்ஷன் டி. ஞானசூரியன் என்றிருந்தது. அதற்கு நான்கு வரிகளுக்கு மேலே 'உடைகள் ஃபாஷன்' என்று அச்சிடப்பட்டிருந்ததை மூர்த்தி கலாவிடம் பெருமையுடன் காண்பித்தான்.

''நமக்கு எவ்வளவு கிடைக்குங்க?''

''எது, பணமா?''

''ஆமா.''

''முதல் படம்தானே பத்தாயிரம் ரூபா கிடைக்கும்'' என்றான் அலட்சியமாக.

பத்தாயிரம் என்றதும் பாறைகளுக்கு இடையே அலை எழும்புவதைப் போல அவன் உள்ளத்தில் மகிழ்ச்சி.

பூஜைக்கு மறுநாள் கடைக்குச் சென்ற மூர்த்தி வீட்டுக்கு அகாலமாகத் திரும்பி வந்தான். ''அவசரமா ஐயாயிரம் வேணும்மா. சூரியனுக்கு நாம் உதவி செஞ்சே தீரணும்'' என்றான்.

''நம்ம கிட்டே ஏதுங்க பணம், விளையாடறீங்களா?''

''உனக்கு இஷ்டமில்லேன்னு தர முடியாதுன்னு சொல்லிட்டுப் போ. நான் எங்கேயாவது போய் வட்டிக்காவது வாங்கிக் குடுத்தாகணும்.''

''நீங்க எதுலயும் மாட்டிக்கக் கூடாதுங்கற பயத்துலதான் சொல்றேங்க. இன்னியோட சினிமாவுக்கும், உங்க ஃப்ரெண்டுக்கும் தலை முழுகுங்க. இந்தாங்க பிடியுங்க. நீங்க வாங்கித் தந்த நகைகளைத் தரமுடியாதுன்னு உங்க கிட்டச் சொல்ல எனக்கு என்ன உரிமை இருக்கு?''

அவள் ஸ்டூலின் மேல் கழற்றி வைத்த நகைகளைக் கொத்தாகக் கணேஷ் அள்ளிக் கொண்டு ஓடினான். ''டேய் டேய் டேய்'' என்று அவன் பின்னே மூர்த்தி ஓடி விரட்டிப் பிடுங்கி அவற்றை அட்டைப் பெட்டிக்குள் போட்டு எடுத்துக் கொண்டான். ''பைனான்ஷியர் கேட்ட பணத்துல பாதிதான் குடுத்தார். கே.ஆர். விஜயாவுக்கு அட்வான்ஸ் குடுத்தோம். எஸ்வியெம்முக்கு அட்வான்ஸ் குடுத்தோம். லாபுக்கு....''

''அந்தக் கணக்கெல்லாம் யார் கேட்டாங்க.''

''நாளன்னைக்கு ஷூட்டிங். ட்ரஸ் வாங்கப் பணம் இல்லை. பாவம் அவன் என்ன பண்ணுவான். ரவிச்சந்திரனுக்கு சூட் ரெண்டு செட் தைக்கணும். கே. ஆர். விஜயாவுக்கு காஞ்சீபுரம் எடுக்கணும். இல்லேன்னா....''

''ஏதாவது பண்ணுங்க. என்னை விடுங்க.''

''ஏரியா வித்துட்டா எல்லாத்தையும் சூரியன் டபுளாத் திருப்பித் தரப்போறான்.''

கலா மௌனியானதால் மூன்று நாள் ஷூட்டிங் அமர்க்களமாக நடந்தது. அப்புறம் பணப் பற்றாக்குறையால் படப்பிடிப்பு நின்றது. பணத்துக்காக ஞானசூரியன் ஊருக்கு ரயில் ஏறினான். கடந்த ஏழு மாதங்களாக மறுபடியும் மூர்த்தியின் வீட்டில் சூரியன் உதிக்கவில்லை.

மூர்த்தி வேறு படக் கம்பெனிகளில் 'காஸ்ட்யூமர்' சான்ஸ் கேட்டு அலைய ஆரம்பித்தான். கலாவின் வார்த்தைகள் அவன் காதுகளில் ஏறவில்லை.

கடைசியில் தொழில் படுத்து விட்டது. தொலைபேசி போய் விட்டது. நான்கு மிஷின்களில் ரெண்டை விற்றுப் போன மாதம் வீட்டுச் செலவுகளைச் சமாளித்தான். மத்தியானத்தோடு அரிசி, பருப்பு எல்லாமே காலி. நாளை கணேஷ் நெய்யில்லாமல் சாப்பிட மாட்டான்.

கருக்கிருட்டு நேரம்.

கலா பல வேளைகளில் பட்டினி கிடந்து வாங்கிய மூன்று சக்கர சைக்கிளை கணேஷ் மிதித்து முற்றத்தில் வட்டமடித்துக்கொண்டிருந்தான். அவனுடைய குதூகலத்தை அவள் வீட்டு வாசலில் அமர்ந்து மனம் குளிர ரசித்துக் கொண்டிருந்தாள்.

கணேஷ் சைக்கிளை விட்டு இறங்கி அவளிடம் ஓடிவந்து கழுத்தைக் கட்டிக் கொண்டு ''பசிக்குதும்மா'' என்றான்.

''அப்பா நம்ம ரெண்டு பேருக்கும் இட்லி வாங்கிட்டு வருவார் கண்ணு!'' என்றாள், அவன் கன்னத்தில் இதழ்களைப் பதித்து 'ம்ம்ம்' என்று கொஞ்சினாள்.

''எப்போ வருவார்?''

''இதோ வந்துக்கிட்டே இருக்கார்.''

''பொய் சொல்றே. எனக்குச் சோறு போடு.''

''சமைக்கலைடா கண்ணு. அப்பா வந்திருவார். இன்னும் கொஞ்ச நேரம் சைக்கிள் ஓட்டு.''

''சைக்கிள் எனக்கு வேண்டாம் போ, சோறுதான் வேணும்.''

''சே! சாப்பிடவே பிடிக்கலை. எங்க வீட்டிலே முந்தாநாள் அவல் கேசரி, நேத்து அவல் உப்புமா, இன்னிக்கு அவல் பாயசம், நாளைக்கு....''

''அப்போ உங்க வீட்டிலே 'அவல் ஒரு தொடர்கதை'ன்னு சொல்லு!''

— ச. சம்பத்குமார்.



"போயி உன் நோட்டை எடுத்து நான் வரைஞ்சு தந்த மாதிரி ஒரு யானைப் படம் வேகமா வரைஞ்சு கொண்டா ஓடு ஓடு."

கணேஷ் போன வருஷத்து மூர்த்தியின் டயரியை எடுத்துப் பென்சிலால் கிறுக்கத் தொடங்கினான். கலா கடும் பசியை மறக்க கல்கி வாசித்துக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரத்துக்குப் பிறகு அவள் மடியில் வந்து விழுந்த கணேஷ், "அப்பா எப்ப வருவார்? எனக்குப் பசி எடுக்குது ஊஊஊ" என்று சிணுங்கினான்.

"ஆறு மணிக்கு வரேன்னார். மணி எட்டாகுது. அவர் வந்ததும் நல்லா அடி. நீ மட்டும் ஓட்டல்ல சாப்பிட்டு எங்களைப் பட்டினி போடறியான்னு கேளு."

கணேஷ் சரியென்று தலையசைத்தான். டயரியில் மறுபடியும் சிறிது பென்சிலால் தேய்த்தான். அப்புறம் டயரியையும் பென்சிலையும் மூலைக்கு ஒன்றாக எறிந்துவிட்டுத் தரையில் உருண்டு அவனையறியாமல் உறங்கினான். கலா பாயை விரித்து அவனைத் தூக்கித் தலையணையில் படுக்கப் போட்டாள்.

இரவு பத்து மணிக்கு மூர்த்தி கையில் பெரிய பொட்டலத்துடன் வந்தான். "ஓட்டல்ல எதுவுமே இல்லே. எல்லாம் காலியாயிருச்சு. வா சாப்பிடலாம்" என்றபடி தரையில் உட்கார்ந்தான். அவன் முகத்திலும் பசி தெரிந்தது.

"என்ன வாங்கிட்டு வந்தீங்க? கணேஷ் இவ்வளவு நேரம் முழிச்சுக் கிடந்துட்டு இப்பத்தான் தூங்கறான்."

"அழுதானா?"

"என்ன கேள்வி கேக்கறீங்க? என்னாலயே பசி தாங்க முடியல. அது குழந்தை தாங்குமா?"

"நான் என்னடி பண்ணுவேன். ஒரு கஸ்டமர் இன்னிக்குப் பணம் தர்றேன்னு சொல்லிட்டு ஏமாத்திட்டான்."

"அப்புறம்?" கலா கவலையுடன் கேட்டாள்.

"சிந்தாதிரிப்பேட்டை போயி ஒரு ஆள்கிட்ட ஐம்பது கைமாத்து வாங்கிட்டு வர்றேன்."

"நாளைக்கு எல்லாம் வாங்கணும். அரிசி இல்லே. எண்ணெய் இல்லே. கணேஷுக்கு நெய் இல்லே."

"இந்தப் பணத்தை வெச்சு முக்கியமா வேண்டியதை வாங்கிக்கோ. நெய் அடுத்த மாசம் நெய்க்காரனுக்கு பாக்கியைக் குடுத்துட்டு வாங்கிக்கலாம்."

"ஊஹூம். நெய் இல்லாம கணேஷ் சாப்பிட மாட்டான். அரிசிய வேணுக் குறைச்சு வாங்கிக்கறேன்."

"நெய் இல்லாமச் சாப்பிடறதுக்கு அவனைப் பழக்குடி."

"அவனுக்கென்ன டானிக்கா வாங்கிக் குடுக்கிறீங்க? நெய்யையும் நிறுத்தச் சொல்றீங்க. நான் வேணா நாளைலேர்ந்து காபி குடிக்கறதை நிறுத்திக்கிறேன்." மூர்த்தி கொண்டு வந்த பொட்டலத்தைப் பிரித்துக் காய்ந்த டீக்கடை பன்களை எடுத்தான்.




பசியுடன் உறங்கிக் கொண்டிருந்த கணேஷ் மூர்த்தியின் பேச்சுக் குரல் கேட்டதும் துள்ளி எழுந்தான். மௌனமாக மூர்த்தியிடம் தள்ளாடி நடந்து வந்து அவனுடைய உச்சி மயிரைக் கெட்டியாகப் பிடித்து ஆட்டுக் கல்லைச் சுழற்றுகிற மாதிரிச் சுழற்றி முகத்திலும் முதுகிலும் சரமாரியாகக் குத்துக்களைப் பொழிந்தான்.

"டேய் விட்றா விட்றா" என்று சிரித்தபடி அவன் கத்தினான்.

கணேஷ் சளைக்காமல் குத்து விடவே மூர்த்தி தலையைக் குனிந்து கொண்டு அவற்றைத் தாங்கினான். கலா கணேஷின் கையைப் பிடித்து இழுத்து, "அப்பாவையா அடிக்கிறது, பாவம் இல்லே" என்று அதட்டினாள்.

"மடையா... நீமட்டும் ஓட்டலுக்குப் போயி... நல்லா சாப்டுட்டு எங்களைப் பட்டினி போடறியா?"

அவன் சொல்லிக் கொடுத்தபடியே சொன்னான். முதலில் சிரித்துக் கொண்டிருந்த மூர்த்தியின் கண்கள் கலங்கின. "உங்களை விட்டுட்டு நான் என்னிக்குடா சாப்பிட்டேன்?"

## 1972

"கணேஷை இங்கிலீஷ் மீடியத்துல சேர்க்கணுங்க. இங்கிலீஷ்தான் தமிழை விட அவனுக்கு நல்லா வருது" என்றாள் கலா.

"சும்மா கார்ப்பரேஷன் ஸ்கூல்லியே சேரு. பீசுக்கு நாம எங்கே போறது?"

"ஆம்பளைப் பையனைக் கார்பரேஷன் ஸ்கூல்ல சேர்க்கக் கூடாதுங்க. பீடி சிகரெட் குடிச்சுக் கெட்டுப் போயிருவான்."

"கார்பரேஷன் பள்ளிக்கூடத்திலே படிச்சு எத்தினி பேரு டாக்டராவும் கலெக்டராவும் வந்திருக்காங்கன்னு உனக்குத் தெரியுமாடீ? நான் எந்தக் கட்சின்னு உனக்குத் தெரியுமில்லே?"

"தெரியும்."

"நான் போயி எம்பிள்ளையை இங்கிலீஷ் மீடியத்துல சேர்க்கலாமா?"

''தமிழ்தமிழ்னு மைக்கைப்பிடிச்சுக்கிட்டுக் கத்தற உங்க தலைவர்கள் வீட்டுக்குப் போயிப் பாருங்க. பசங்களை டான்பாஸ்கோவிலயும் சர்ச் பார்க்லேயும் சேர்த்திருப்பாங்க.''

மூர்த்தி கடைக்குச் சென்ற பிறகு கலா செயின்ட் மேரீஸ் ஆங்கிலப் பள்ளிக்குக் கணேஷை நடத்திச் சென்றாள். கால் கடுக்க க்யூவில் நின்று அப்ளிகேஷன் வாங்கி அவனைப் பரீட்சைக்கு உட்கார்த்தி வைத்தாள்.

அவனுக்கு ஒரு வருடத்துக்கு மேலாகவே தமிழையும் ஆங்கிலத்தையும் அவளே வீட்டு சரஸ்வதி படத்துக்குக் கீழே உட்கார்த்தி வைத்துச் சொல்லிக் கொடுத்திருந்ததால் முதல் வகுப்புக்காக நடத்தப்பட்ட தேர்வில் நிறைய மதிப்பெண்கள் பெற்று, பள்ளியின் முதல்வர் மிஸ் சுநீதா பணிக்கரை ஆச்சரியத்தில் ஆழ்த்தினான். கலா அவனுடைய வயதைக் கூட்டிச் சொல்லி முதல் வகுப்பில் சேர்த்து விட்டாள்.

குழந்தைகளைப் பள்ளிக்கு அழைத்து வரவும் திரும்ப வீட்டில் கொண்டு போய் விடவும் 'செயின்ட் மேரீஸ்' என்று எழுதப்பட்ட சைக்கிள் ரிக்ஷாக்கள் இருந்தன. ரிக்ஷாவுக்காக மேலும் நாற்பது ரூபாய் கட்ட இயலாமல் கலாவே தினமும் அவனைப் பள்ளிக்கு அழைத்துச் சென்றாள். பள்ளி வாசலில் கார், ஸ்கூட்டர், ஆயாக்களோடு மூன்றரை மணி வெய்யிலில் காத்து நின்று அவனை வீட்டுக்கு அழைத்து வந்தாள்.

**சே**லத்திலிருந்து கடனுக்கு வாங்கி வந்த துணிப் பார்சல்களை மூர்த்தி ஒரு ஆள் உயரத்துக்குக் கால்மாட்டில் அடுக்கிவைத்துவிட்டுக் கனைப்புடன் அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்தான். படபடவென்று கதவு தட்டப்படும் சப்தம் கேட்டுக் கண் விழித்தான்.

வீட்டு வாசல் பாதி திறந்து அதிகாலை வெயில் தரையில் நீண்டிருந்தது. பக்கத்தில் உறங்கிய கலாவையும் கணேஷையும் காணோம். யார் கதவைத் தட்டியது என்று எழுந்து லுங்கியைச் சரியாகக் கட்டிக் கொண்டு வெளியே தலையை நீட்டினான்.

''கதவைத் திறடா'' என்று குளியலறைக்குள்ளிருந்து கலாவின் குரல் வந்தது. குளியலறைக் கதவு வெளிப் பக்கம் தாழிடப்பட்டிருப்பதைப் பார்த்துவிட்டு மூர்த்தி ஓடினான். தாழ்ப்பாளை விலக்கிக் கலாவை விடுதலை செய்தான். ஈரப் புடவையுடன் கலா வீட்டுக்குள்ளே ஓடினாள்.

''எங்கே போயிட்டான் அந்த ராஸ்கல்?'' என்று மூர்த்தி கூச்சல் போட்டான். சமையற்கட்டின் மூலையில் ஒளிந்து கொண்டிருந்த கணேஷின் சட்டையைப் பிடித்து இழுத்து வந்து'பளார் பளார்' என்று அறைந்தான்.

''இனிமே இப்படிச் செய்வியா செய்வியாடா?''

''செய்வேன்.''

மூர்த்தியின் கால்பந்து போல் ஒரு உதை விட கணேஷின் தலை சுவரில் மோதியது.

குறுக்கே புகுந்த கலாவுக்கு நாலைந்து அடிகள் கிடைத்தன. ''பிள்ளை தெரியாம தாழ்ப்பாளைப் போட்டுட்டா அதுக்காக இப்படியா அடிக்கிறது?''

''டெய்லி தெரியாம தாழ்ப்பாளைப் போடறானா? நான் வீட்டில இருந்ததினால திறந்து விட்டேன்டீ. இல்லேன்னா நீ பாத்ரூமுக்குள்ளேயே கிடக்க வேண்டியதுதான்.''

மூர்த்தி சேலத்திலிருந்து கொண்டு வந்த துணிகளைச் சாயம் முக்கி ஒரு பள்ளிக்கூடத்துக்குச் சீருடை தைத்து சப்ளை செய்தான். அப்புறம் நாலைந்து பள்ளிகளிலிருந்து சீருடைக்கு ஆர்டர்கள் வந்தன. அடிக்கடி சேலம் போனான். லாபம் வாரி வாரியாக வந்தது. சினிமா ஆசையினால் சீரழிந்துபோன நிதி நிலைமை சீருடையால் சீரடைந்தது.

''நம்ப ராமசாமி எம்பா ஜட்டி போட தூக்கிலே தொங்கிட்டான்?''

''இருந்த அவனுடைய பாண்ட், வேஷ்டி, கைலி எல்லாத்தையும் அவன் பெண்ஜாதி பாத்திரக்காரனிடம் போட்டுவிட்டு எவர்சில்வர் தூக்கு வாங்கின கொடுமை தாளாமல்தான்.''

—உ. ராஜாஜி




## 1975

**தி.** நகரில் மாமரங்கள் சூழ்ந்த சின்ன, ஆனால் தனி வீட்டின் வாசலில் செயின்ட் மேரீஸ் பள்ளியின் பேருந்து வந்து நின்றது.

வயதுக்கு அதிகமாக நீளக் கைகால்களுடன் வளர்ந்திருந்த கணேஷ் முதுகில் புத்தகச் சுமையுடன் படிகளில் சுறுசுறுப்பாக இறங்கி பஸ்ஸில் ஏறினான்.

செல்வத்தின் பூரிப்பால் இரண்டு சுற்றுப் பருத்துவிட்ட கலா மேலும் சிவப்பாக வாசலுக்கு வந்து நகர்ந்த பஸ்ஸை நோக்கிக் கை அசைத்தாள்.

சில நிமிடங்களுக்குப் பிறகு அதே வீட்டுக்குள்ளிருந்து பெல் பாட்டம் அகல பெல்ட் கருப்புக் கண்ணாடி சகிதமாக வெளிப்பட்ட மூர்த்திமுற்றத்தில் ஸ்கூட்டரைஉதைத்தான். வழியனுப்புவதற்காக மறுபடியும் வாசலுக்கு வந்த கலாவுக்கு 'டாடா' சொன்னான்.

மாலையில் கலா முகத்துக்கு நிறைய பவுடர் பூசி, நெற்றிக்கு வட்டமாக இட்டு வீட்டின் பின்பக்கம் பிரம்பு நாற்காலியில் சாய்ந்திருந்தாள். நாகரிக உடைகளைப் பற்றிய முறம் போன்ற பிரெஞ்சுப் பத்திரிகையை மடியில் வைத்துப் புரட்டினாள். இயந்திர கதியில் அவளையும் அறியாமல் ''கணேஷ் மரத்தில் ஏறாதேடா'' என்று சொல்லிக் கொண்டே இருந்தாள்.

கணேஷ் கேட்பதாயில்லை. உயரத்தில் தெரிந்த மாவடுவைக் குறிவைத்துக் குரங்கு போலக் கிளைக்குக் கிளை தாவி ஏறினான்.

'நறநற'வென்று கிளை முறியும் சப்தம். கலா அலறினவாறு பாய்ந்து கணேஷைக் கரங்களில் ஏந்திக் கொண்டு சாய்ந்தாள்.

எந்தக் காயமும் இல்லாமல் மண்ணைத் தட்டிக் கொண்டு எழுந்த கணேஷ் ''ரத்தம்'' என்றான்.

''எங்கடா?''

''உன் கழுத்தில.''

புடவைத் தலைப்பால் வழிந்த ரத்தத்தைக் கலா ஒற்றி எடுத்தாள். காய்ந்து போன குச்சி போன்று அவள் கழுத்தை நீளமாகக் கிழித்திருந்ததை அப்போதுதான் உணர்ந்தாள்.

''நல்லவேளை, நான் உன்னைப் பிடிக்கலேன்னு இந்தக் கல்ல பட்டு இந்நேரம் உன் மூளை சிதறியிருக்கும். மரத்தில ஏறு தேன்னாக் கேக்கறியா.''

## 1976

கலா, ''நிறுத்துங்க. ஏன் இப்படி அவனைப் போட்டு மிருகத்தனமா அடிக்கறீங்க?'' என்று கேட்டாள்.

''அவன் என்ன பண்ணிட்டு வந்திருக்கான்னு அவனையே கேளு.''

கலாவைக் கட்டிக் கொண்டு கணேஷ் தேம்பினான்.

''அந்தக் கிழவன் எவ்வளவு அசிங்கமா என்னைக் கேட்டுட்டான் தெரியுமா?''

''எந்தக் கிழவன்?''

''அட அந்த மூணாவது வீட்டில இல்லே மிலிட்டரிக்காரன். லோலோன்னு கத்தறான். ஏண்டா அவன் வீட்டில பந்தை அடிச்சே?''

''சுரேஷ்தான்...ஊஊ... அடிச்சான்.... ஊஊ....''

''நீதான் அடிச்சுக் கண்ணாடியை உடைச்சிருக்கே. பொய் சொல்லாதே. அன்னிக்கு செடிலேர்ந்து பூவை யெல்லாம் பிச்சு எறிஞ்சுட்டேன்னு புகார் பண்றான். இன்னிக்கு இந்த வேலை செஞ்சிருக்கே.''

''எவனோ சொல்லிட்டான்னு இங்க வந்து ஆடறீங்களே. நாளைக்கு சுரேஷைக் கூப்பிட்டு நான் விசாரிக்கிறேன். நீ போயி முகத்தை அலம்பிட்டு வாடா கண்ணு.''

## 1977

சமையற்கட்டில் வேலைகளை முடித்த கலா களைப்புடன் கட்டிலில் விழுந்தாள். தலை மாட்டில் இருந்த ஸ்விட்சை அழுத்தி அறையை நீலமாக்கினாள். முதுகில் உறுத்திய ஒற்றைப் பின்னலை எடுத்து மார்பில் போட்டுக்கொண்டாள். அவள் பக்கமாகப் புரண்டு படுத்த மூர்த்தி கரத்தை மெல்ல அவள் மீது போட்டான். அவள் அதை ஒதுக்கித் தள்ளினாள்.

''ஆறாவது வர்றதுக்குள்ளே அவனுக்கு என்னடீ சைக்கிள்? அன்னிக்கு வாட்ச் கேக்கறான்னு சொன்னே நல்ல ஸ்விஸ் வாட்சா வாங்கிக் குடுத்தேன். அப்புறம்




''சாப்பாடு உடம்புக்கு ஒத்துக்கலைன்னு ஏங்கி என் மகன் லெட்டர் போட்டு இருக்கான்.''

''உங்க மனைவியை அனுப்பிச் சமைத்துப் போடச் சொல்வதுதானே?''

''செய்யலாம். ஆனா ஜெயில் அதிகாரிங்க அனுமதிக்க மாட்டாங்களே!''

—உ. ராஜாஜி

போட்டோ கிளப்பிலே சேர்ந்திருக்கான்னு சொன்னே டப்பா காமராவ வாங்கிக் குடுக்கிறதுக்கில்லாம காஸ்ட்லி ஜப்பான் காமராவ வாங்கிக் குடுத்திருக்கே. இப்போ பைக். அதுவும் ஃபாரின் ரேஸ் பைக். விலை என்ன தெரியுமாடி?''

''வாங்கித் தரவேண்டாம்னு சொல்லிட்டன்ல அப்புறம் என்ன?''

''ஆயிரத்து ஐந்நூறு ருபா. நோட்டா அடிக்கிறோம் நாம.''

''நமக்கு இருக்கிறது ஒரு பிள்ளை. அது ஆசைப்படறத...''

''நமக்கு ஒரே பிள்ளைன்னு முடிவு பண்ணிட்டியா?'' என்று அவளை இழுத்துத் தன்னோடு இணைத்தான்.

''பேசாமத் தூங்குங்க.'' என்று அதட்டினாள். அவன் பிடியிலிருந்து திமிறினாள்.

''ரேஸ் பைக் உம்மகனுக்கு சாங்ஷன்ட்.''

கலாவிடமிருந்த எதிர்ப்புச் சக்தி திடீரென்று அகன்றது. விரலை நீட்டி நீலவிளக்கையும் அணைத்து அறையை இருட்டாக்கினாள்.

''கணேஷ் வறுமையில அரை வயிறு சாப்பிட்டு நம்மோட கஷ்டப்பட்டவங்க. அவன் கேக்கும்போது இல்லேன்னு சொல்ல எனக்கு மனசு வரலீங்க.''

## 1978

மூர்த்தியின் உடல் நடு வீட்டில் கிடத்தப்பட்டிருந்தது.

நண்பர்களின் மாலைகள் அவன் மீது போட இடம் இல்லாமல் கால்மாட்டில் குவிந்திருந்தன. 'உங்களுக்கு இத்தனை நண்பர்களா' என்று கலா தாங்க முடியாத மன வேதனையுடன் அதிசயித்தாள். அவன் முகத்தைப் பார்த்துப் பார்த்து அழுதாள்.

நீள முடி வளர்த்து ஸ்டெப் வெட்டியிருந்த கணேஷ் கண்ணீர்க் கன்னங்களுடன் அவள் பக்கத்தில் அமர்ந்திருந்தான். கலாவிடம் அழுகை வெடித்த போது அவனும்

சேர்ந்து அழுதான். சாவின் நிஜமான பொருள் அவனுக்கு முழுமையாகப் புரிபடவில்லை. சில அரசியல் தலைவர்களைப் போல நினைத்த மாத்திரத்தில் சிந்தெடிக் கண்ணீரைக் கன்னங்களில் உற்பத்தி செய்ய அவனுக்குத் தெரியவில்லை. தன் வேதனைகளைச் சுயமாக வெளிக்காட்டப் பிரயத்தனம் செய்யாமல் கலா அமைதியாக இருந்தபோதெல்லாம் அவனும் மௌனமாக இருந்தான்.

வெளியூரிலிருந்து வந்த கலாவின் அண்ணனும் அண்ணியும் வீட்டு நிர்வாகத்தைத் தற்காலிகமாகப் பெருமையுடன் பொறுப்பேற்று நடத்தினர். கலாவின் செழிப்பான நிதி நிலைமையைக் கண்டு பொறாமைப்பட்ட அண்ணி, கணேஷை அன்புடன் தனியாகத் தோட்டத்திற்கு அழைத்துச் சென்று தோண்டித் துருவி ஆயிரம் கேள்விகள் கேட்டாள்.

ஐந்தாறு மாதங்களுக்கு முன்பு மூர்த்தி வயிறு வலிக்கிறதென்று சாப்பிட்டுவிட்டுச் சாதாரணமாகச் சொன்னபோது அது உயிரையே பறிக்கும் மேஜர் ஆபரேஷனில் கொண்டு போய் விடும் என்று கலா துளியும் எண்ணவில்லை.

மூர்த்தி புன்னகை செய்தபடியே கனவுகள் வராத துயிலில் ஆழ்ந்திருந்தான். அந்தக் கடைசிப் புன்னகை கலாவுக்கு அவனுடைய முதல் புன்னகையை நினைவூட்டியது. பாலாஜி வணிகவியல் கல்லூரியிலிருந்து படியிறங்கி வந்தபோது முதல் முதலாக ஒருவருக்கொருவர் புன்னகையைப் பரிமாறிக்கொண்ட சம்பவம் நினைவுக்கு வந்து நெஞ்சைப் பிழிந்தது. சொல்லாமல் கொள்ளாமல் சேலத்துக்குப் போனவன் துணிப் பார்சல்களுடன் நள்ளிரவில் திரும்பி வந்தபோது கூட இதே மாதிரித்தான் புன்னகை செய்தான்.

ஒருவர் முகத்தில் ஒருவர் கண் விழித்து. விடிந்து வெகு நேரமாகி விட்டது என்பதை உணர்ந்த ஆரம்ப தேனிலவு நாட்கள். மார்கழிக் குளிரில் சுப்பிரமணிய சுவாமி கோவில் தெருவிலிருந்து ரிக்ஷாவில் அவளை அவன் பிரசவ ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றது. பசியுடன் அலைந்து கடன் வாங்கி அவளுக்கும் குழந்தை கணேஷுக்கும் பன் வாங்கிக் கொண்டு வந்து கணேஷிடம் அடி வாங்கியது எல்லாமே அவள் உள்ளத்தில் ஊர்வலம் வந்தன. முகம் புதைத்து அழுவதற்குத் தனக்கு இனிமேல் ஒரு தோள் கிடையாது என்று திடீர் திடீரென்று நினைத்துக்கொண்டு, மூர்த்தியின் கன்னங்களுடன் பக்கத்தில்இருந்தகணேஷைக்கட்டிக்கொண்டு அழுதாள். உங்க மகனை அமெரிக்காவுக்கு அனுப்பிப் படிக்க வச்சுப் பெரிய ஆளாக்குவேன் என்றுமனத்தினுள் சபதம் செய்தாள்.

நண்பர்கள் எல்லோரும் பணம் திரட்டி ''செலவுக்கு வச்சுக்கோங்க'' என்று அவளிடம் மூவாயிரத்துச் சில்லறையை ஒப்படைத்தனர். ''அவர் என்னை அந்த நிலைமையில் விட்டுட்டுப் போகலீங்க. உங்களையெல்லாம் நான் மறக்கவே மாட்டேன். தயவு பண்ணி எடுத்துக்கோங்க'' என்று அதைத்தொட மறுத்தாள்.

மூர்த்தி சாம்பலாகி நாலைந்து நாட்களுக்குப் பிறகு அண்ணனும் அண்ணியும் ஊருக்குக் கிளம்ப மூட்டை கட்டினர். அண்ணி, ''எங்களுக்கு அறுநூத்தி எழுபத்தைஞ்சு ரூபா செலவாயிருச்சும்மா'' என்றாள். உடனே கலா மௌனமாகப் பீரோவிடம் நடந்தாள். பத்து நூறு ரூபாய்த் தாள்களை எடுத்துக் கொடுத்தாள். அண்ணன் ஜன்னலுக்கு வெளியில் பார்த்துக் கொண்டிருந்தான்.

## 1981

—மிஸஸ் கலா, திடீர்னு உங்க ரெடிமேட் ஆடைகளுக்கு வெளி நாடுகள்ல எப்படி கிராக்கி வந்தது?

—திடீர்னு வரல. படிப்படியாத்தான் அயல் நாட்டு மார்க்கெட்டை நாங்க பிடிச்சோம்.

''கணேஷ் இதான் மம்மியா?''

''ஆமாம் ரோஸி, ஏன்?''

''நிஜமாகவே ரொம்ப அழகா இருக்காங்க கணேஷ்.''

—இந்தத் தொழில்ல உங்களுக்கு எப்படி ஆர்வம் வந்ததுன்னு சொல்ல முடியுமா?

—காலம்சென்ற என் கணவர்தான் இந்தத் தொழிலை ஆரம்பிச்சார்.

—ஆஹாங்

—நான் அவரைக் கட்டிக்கிட்டப்ப அவர் சாதாரண டெய்லர். வேற வேலை கிடைக்காததினால டெய்லர் ஆனவர் அவர். அறுபது ரூபா வாடகைல நாங்க சைதாப்பேட்டைல இருந்தோம்.

''கணேஷ், வலது கைல அது என்ன வாட்ச்சா வளையலா?''

''வாட்ச்தான். லேடி ஸீக்கோ. டேடி சிங்கப்பூர்லேருந்து வாங்கிட்டு வந்தது. எப்பவாவதுதான் மம்மி அதக் கட்டிப்பாங்க.''

—தீபாவளி பொங்கல் சமயங்கள்ல தையல் வேலை நிறைய வரும்போது அவரோட தொழில்ல நானும் உதவி செய்வேன். அப்புறம் ரெண்டு சினிமாப் படங்களுக்கு காஸ்ட்யூமரா அவர்...

''எப்பவும் இப்படி ப்ளாக் ஸாரியும் ப்ளாக் ப்ளவ்ஸும்தான் போட்டுப்பாங்களா?''

ஒரு மாணவன்: 'நான் ஞாயிறு மாலை ஐந்து மணிக்கு ஊருக்குப் போவேன்' இது எந்தக் காலம்?

மற்றொரு மாணவன்: சரியான ராகு காலம்!

— கு. பாலசுப்பிரமணியம்,






—சேலத்திலேர்ந்து மொத்தமா துணி வாங்கிச் சாயம் முக்கி...

''இல்லே ரோனி, டீ.வி.க்காக டார்ச் சுலர்ல டிரெஸ் பண்ணிருக்காங்க.''

—எத்தனை பேருக்கு உங்க கம்பெனில வேலை குடுத்திருக்கீங்க?

—சின்ன அளவிலேதான் இப்ப ஏற்றுமதி செய்றோம். அம்பத்தூர் பாக்டரில எழுபது பேர் வேலை பார்க்கறாங்க. ஆர்மீனியன் ஸ்ட்ரீட் ஆபீஸ்ல பதினைஞ்சு பேர். ஆழ்வார்பேட்டைல ஸ்டுடியோ வச்சிருக்கோம். டிசைனிங் பிரிண்டிங் எல்லாம் அங்கதான். அங்க ஒரு பதினைஞ்சு பேரு. இதுல பதினெட்டுப் பெண்கள். ஊனமானவங்க ஆறு பேர். ரிபட்ரீயட்ஸ் அதாவது தாயகம் திரும்பினவங்க.

''அப்போ ரெண்டு கம்பெனி வச்சிருக்கீங்களா கணேஷ்?''

''ஊஹூம். கான்டினென்டல் கார்மென்ட்ஸ் மட்டும்தான் எங்க சொந்தக் கம்பெனி. இன்னொன்ல மம்மி பார்ட்னர்.''

-Nor do our own people wear the kind of garments which the west demands வர்ற ஏப்ரல்லேர்ந்து ஏற்றுமதி அதிகமாக்கறோம்.

—இந்தத் துறையில நீங்க வெற்றியின் உச்சிய அடைஞ்சுட்டதா நினைக்கறீங்களா'

—உச்சில இருக்கிறதை விட உச்சிய அடைறதுக்காக வாழ்க்கை பூராவும் ஏறிக்கிட்டே இருக்கிறதிலேதான் த்ரில் இருக்கு. உச்சியை அடைஞ்சுட்டதா ஒரு நிமிஷம் திருப்திப் பட்டுட்டா சோம்பேறித்தனம் வந்துடும். இன்னும் கொஞ்ச நாள்ல புடவை கட்டின பெண்ணையே மெட்ராஸ்ல பார்க்க முடியாதுன்னு பத்து வருஷத்துக்கு முன்னால என் ஹஸ்பெண்ட் சொன்னப்ப நான் சிரிச்சேன். அவர் சொன்னது ஓரளவுக்கு உண்மையாகிக்கிட்டிருக்கு. எதுக்காகச்சொல்றேன்னு ஒவ்வில்லாம மாறிக்கிட்டே போறதுக்குப் பேர்தான் நாகரிகம். நம்ம பாரம்பரியத்தையும் கலாசாரத்தையும் காயப்படுத்தாத மாற்றங்களை நாம தயங்காம ஏத்துக்கலாம். என்னால சும்மா இருக்க முடியாது. ஃபாஷன் டெக்னாலஜிக்காக ஒரு கல்லூரி ஆரம்பிக்கலாம்னு இருக்கேன். ஓரளவுக்கு என் கணவரோட கடைசி நேர விருப்பங்களை நிறைவேத்திட்டேன். என் பிள்ளையோட படிப்பு முடிஞ்சதும் அவனை ஸ்டேட்ஸ்க்கு அனுப்பி...

''ஹப்பா என்னையும் ஸ்டேட்ஸ்க்குஅழைச்சுக்கிட்டுப் போவியா கணேஷ்?''

—Infact காத்தால அஞ்சரைக்கே என்னோட நாள் ஆரம்பிச்சிரும். குளிச்சிட்டு பூஜை முடிச்சுட்டு ஏழரைக்கு ஃபாக்டரில இருப்பேன்.

''மம்மி அவ்ளோ சீக்கிரமா வீட்டை விட்டுப் போயிருவாங்களா கணேஷ்?''

''ஆமா.''

''எப்பத் திரும்பி வருவாங்க?''

—கணக்குகளை யெல்லாம் சரிபார்த்துட்டு வீட்டுக்கு வர்றதுக்குப் பதினொன்றரை ஆயிடும். மறுபடியும்...






''உன் கேள்விக்கு மம்மியே பதில் சொல்லிட்டாங்க.''

கணேஷ் தொலைக்காட்சியின் குமிழைத் திருகினான். ஸ்விட்சை வரிசையாகத் தட்டி, அந்த மாடியறையிலிருந்த எல்லா விளக்குகளையும் பிரகாசமாக எரிய விட்டான். சிவப்பாக வளர்த்தியாகக் கொழு கொழுவென்றிருந்தான். ஜீன்சும் மினுமினுக்கும் சுத்தரீப்பூ டி ஷர்ட்டும் அணிந்திருந்தான். நீள முடியைக் கத்தரித்துக் கிராப்பை மாற்றியிருந்தான்.

''ஏன் அதுக்குள்ளஆஃப் பண்ணிட்டே?'' என்றாள் ரோனி.

ரோனி அவனோடு பத்தாவதில் படிப்பவள். கோதுமை நிறக் கால்கள் மேலே தெரிய ராப் ஸ்கர்ட் இடுப்பில் கட்டியிருந்தாள். கூந்தலை அள்ளி ரிப்பனால் கட்டி பிளாஸ்டிக் ஹேர் பின்னையும் செயற்கை ரோஜாவையும் சூடியிருந்தாள். கவிதைகளால் கனத்த அவள் இதயம் சோக விழிகளில் தெரிந்தது.

''மணி ஏழரை ரோனி! உங்க வீட்ல தேட மாட்டாங்க?''

''மம்மி கிட்ட இன்டர்வ்யூ பண்ணி வைக்கிறேன்னு அழைச்சிக்கிட்டு வந்து டி.வி பெட்டிய காட்டறே. உன்னை என்ன பண்ணலாம்'' என்று அவள் எழுந்தாள்.

''வேற என்ன பண்றது. மம்மிய அநேக நாள் நானே பாக்க முடியறதில்லே. ஞாயிற்றுக் கிழமை மத்தியானத்துல ஒரு ரெ அவர் என்னோட ஃப்ரீயாப் பேசுவா'' என்றான் கணேஷ்.

''அப்போ ஞாயிற்றுக் கிழமை வரவா?''

''மம்மியே உன்னைப் பாக்கணும்னு ஆசைப்பட்டா.''

''பொய்.''

''நிஜமா ரோனி. ப்ராமிஸா. ஒவ்வொரு மாசமும் ப்ராக்ரஸ் கார்டுல சைன் பண்ணும்போது யாரு ஃபர்ஸ்டுன்னு கேப்பா. மூணு மாசமா உம் பேரையே சொல்லிக்கிட்டிருக்கிறதுனால உன்னைப் பாக்கணும்னு அன்னிக்குச் சொன்னா.''

''அடுத்த மாசம் அப்படிக் கேக்க மாட்டாங்க. யார் ஃபர்ஸ்ட்டுன்னு கேப்பாங்க.''

''என்னை செகண்ட் ராங்குக்குத் தள்ளிடலாம்னு பாக்கறயா, அதுமட்டும் நடக்காது.''

மாடிப் படியில் கணேஷுடன் இறங்கும்போது ஹாலின் பிரும்மாண்டமான உள் அலங்காரங்களை மறுபடியும் ரோஸி வியப்புடன் ரசித்தாள்.

''மம்மியோட அறையை இன்னும் நீ பாக்கலியே?''

''நீ எங்கே காட்டினே?''

''இதான் பாரு.''

மாடிப்படியை விட்டு இறங்கிப் பக்கத்தில் இருந்த உயரமான பூவேலைப்பாடுள்ளமரக் கதவுகளைத் தள்ளி விரியத் திறந்துவிட்டான். ரோஸி எட்டிப் பார்த்தாள்.

கையால் வரைந்த பெரிய பாலாஜி பத்மாவதித் தாயார், சுற்றி அஷ்டலட்சுமிகள், ஆண்டாள், டு இன் ஒன், ஸ்ரீமத் பாகவதம், சுந்தர காண்டம்.

''இன்னும் நான் உள்ளே போனதில்லே. இதான் டேடி.''

அந்த அறையின் வாசலுக்கு மேலே ஜரிகை மாலையுடன் இருந்த படத்தை அண்ணாந்து ரோஸி பார்த்தாள்.

பங்களாவை விட்டு வெளியேறி இருவரும் தோட்டத்துக்கு வந்தபோது மிகவும் இருட்டி இருந்தது.

''வெயிட் ரோஸி பஸ் ஸ்டாப் வரை வர்றேன்.''

கணேஷ் வராந்தாவில் இருந்த சைக்கிளை எடுத்தான். உருட்டிக் கொண்டு அவளோடு நடந்தான். சாலையை அடைந்ததும் ''ஸீ யு தென்'' என்றாள் ரோஸி.

''ஸீ யு குட்னைட்.''

''பய்'' என்று கரத்தை அசைத்துக் கொண்டே எதிரே தெரிந்த பஸ் ஸ்டாப்பை நோக்கி சாலையின் குறுக்கே ஓடினாள்.

டொம் என்ற பயங்கரச் சப்தம். படு வேகமாக வந்த ஒரு லாரி தடம் புரண்டு




பிளாட்பாரத்தின் மேல் ஏறிக் கம்பத்தில் மோதி ஓய்ந்தது.

பஸ் ஸ்டாப்பில் நின்றவர்கள் நடுச் சாலையில் ரத்த வெள்ளத்தில் உருத் தெரியாமல் சிதைந்து கிடந்த ரோஸியை நோக்கிஓடி வந்தனர்.

அப்புறம் ஒவ்வொரு இரவும் கணேஷின் கனவுகளில் ரோஸி 'பய்' என்று கை அசைத்துக்கொண்டு சாலையின் குறுக்கே ஓடினாள்.

நான்கு ஆண்டுகளாகப் பள்ளியின் லாங் ஜம்ப் சாம்பியனாக இருந்த கணேஷ் அடுத்த வாரம் நடந்த விளையாட்டு விழாவில் நாலாவதாக வந்து மெரிட் சர்ட்டிபிகேட்டையும் கோட்டை விட்டான்.

## 1982

சோபாவில் கலா அகலமாகச் சாய்ந்து தங்க பிரேம் மூக்குக் கண்ணாடி மாட்டிப் பத்திரிகை புரட்டினாள்.

மானேஜர் கோபால் தயக்கத்துடன் பக்கத்தில் நெருங்கினான்.

''டிரைவர் ஒரு தப்பும் பண்ணலே மேடம். காரை மரத்தில இடிச்சது அவன் இல்லே''

''பின்னே யாரு?''

''நம்ம கணேஷ்.''

''அவன்கிட்ட யாரு கார் சாவியைக் குடுத்தது?''

''எனக்குக் கார் கத்துக் குடுன்னு கணேஷ் டிரைவர்கிட்டப்போயி கேட்டிருக்கு. அம்மாகிட்ட உத்தரவு வாங்கிக்கிட்டு கத்துத் தரேன்னு அவன் சொல்லியிருக்கான். தம்பி அவனைக் கன்னு பின்னுன்னு திட்டிக் காலால உதைச்சிருக்கு. அவன் வேற வழியில்லாம தம்பிய டிரைவர் ஸீட்ல உக்கார வெச்சு....''

''கணேஷ் அப்படி யெல்லாம் செய்யமாட்டான்.''

''உங்களுக்குத் தெரியாது மேடம். தம்பி சில பசங்க கூடச் சேர்ந்து கஞ்சா கூட...''

''ஒண்ணை நாலாக்காதீங்க கோபால். அவனைப் பத்தி எனக்குத் தெரியும். நீங்க சொல்ல வேண்டியதில்லை. போயி வேலையப் பாருங்க. டிரைவரை நீக்கினது நீக்கினதுதான்.''

''வாக்மன் வாங்க தம்பி ஆயிரத்து ஐநூறு கேக்குது.''

''குடுங்க.''

சட்டை பனியன் ஏதும் இல்லாமல் வெறும் கறுப்பு கார்டுராய் ஜீன்ஸ் மட்டும் அணிந்து மாடிப் படியில் கடகடவென்று இறங்கி வந்தான் கணேஷ்.

''காரை எடுக்கலாமா கணேஷ்?'' என்று ஹாலில் தயாராக நின்ற மானேஜர் கோபால் கேட்டான்.

''என் டேப் ரிகார்டர் எங்கே?''

''ஸ்கூலுக்கு நேரமாயிருச்சு கணேஷ்.''

''ஐம் நாட் கோயிங் டு ஸ்கூல். என் டேப் ரிக்கார்டரைக் குடு.''

''பரீட்சை முடிஞ்ச பிறகுதான் அத உன்கிட்டக் குடுக்கணும்னு நேத்து அம்மா சொன்னாங்க.''

''டேப் அதைத்தரப்போறியா இல்லையா?''

''என் கிட்ட இல்லே கணேஷ். அம்மா தான் வெச்சிருக்காங்க.''

கணேஷ் கோபத்தோடு படிகளில் இறங்கி ஓடினான். கலாவின் அறைக் கதவுக்குக் காலால் ஒரு உதை விட்டான். அது விரியத் திறந்தது. உள்ளே பாய்ந்து பல்லைக் கடித்துக் கொண்டு பீரோவின் கைப்பிடியைப் பிடித்து இழுத்தான். பூட்டியிருந்தது.

டிராயர்களை மேஜையில் இருந்து உருவிக் கீழே போட்டு பீரோ சாவியைத் தேடினான். கலா ஆஸ்த்மாவுக்காக வாங்கி வைத்திருந்த மாத்திரைப் புட்டிகள் சிதறின. சின்ன வயதில் அவன் விளையாடின ஹாக்கி ஸ்டிக்கை எடுத்து அங்கே இருந்த படங்களை யெல்லாம் ஒன்று விடாமல் உடைத்து நொறுக்கினான். ஆண் குழந்தைக்காகக் கலா ஒரு காலத்தில் தினமும் குளித்துவிட்டுப் படித்த சுந்தர காண்டம் கணேஷ் விட்ட உதையால் எகிறி மூலையில் போய் விழுந்தது.

ஆஸ்த்மா அதிக உபத்திரவம் தந்ததால் கலா மத்தியானமே காரை எடுத்துக்கொண்டு அலுவலகத்திலிருந்து பங்களாவுக்குத் திரும்பினாள்.

அவனுடைய அறைக் கதவு விரியத் திறந்திருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டு ஓடினாள். உள்ளே போர்க் களம் போல்எல்லாம் சிதறிக் கிடந்ததைக் குழப்பத்துடன் பார்த்தாள். பகல் கொள்ளையா?

பயத்துடன் மூச்சு வாங்க மாடிப் படியில் ஏறினாள். கணேஷின் அறைக்குள்ளிருந்து 'தொக் தொக் தொக்' என்று ட்ரம் சப்தம். ஸ்கூலுக்குப் போகவில்லையா?

டக்டக் டக்டக்.

கதவைத் தட்டினாள்.

கதவு பாதி திறந்தது. கணேஷ் எரிச்சலுடன் கண்களைச் சுருக்கிக் கொண்டு எட்டிப் பார்த்தான். ''வாட் தி ஹெல்?'' என்றான்.

''என்னடா சொன்னே?''

''ஹூ தி ஹெல் ஆர் யு?''

அப்போது உட்பக்கமிருந்து ஒரு பெண் குரல். ''ஹூ இஸ் இட் யார்?'' என்று கேட்டது.

கணேஷை விலக்கித் தள்ளிவிட்டுக் கலா உள்ளே பாய்ந்தாள். சோபாவில் கூந்தலை விரித்துச் சாய்ந்திருந்தவளுக்கு கணேஷை விடக் குறைந்தது பத்து வயது அதிகமிருக்கும். கலாவைப் பார்த்ததும் அவள் 'தடபுட' வென்று எழுந்து அவசரமாகப் பனியனை அணிந்தாள்.

''யார்டீ நீ?''

''மம்மீ போ வெளியே.''

கலா அவள் தலைமயிரைப் பிடித்து. ''யார்டீ நீ உனக்கு இங்க என்ன வேலை?'' என்றாள்.

கணேஷ் கலாவின் கரத்தை ஓங்கித் தட்டி விட்டான். ''அவளைத் தொடாதே. போ வெளியே'' என்று வெறியுடன் கூச்சல் போட்டான்.

''ராஸ்கல் என்னையா அடிக்கிறே?''

கணேஷ் கன்னத்தில் கலா பளார் பளார் என்று அறைய, பின்வாங்கிய கணேஷ் ஸ்டூலின் மேல் இடறி கபோர்டின் மேல் சாய மேலே இருந்து தொப தொப என்று புத்தகங்கள் சரிந்தன. Treasure Island புத்தகத்தோடு Pleasure Island ஹார்ட்கோர் வீடியோ டேப் விழுந்தது. ஜாமெட்ரி பாக்ஸிலிருந்து சிதறிய டிவைடரை வெடுக்கென்று கையில் எடுத்தான். அதன் கூரான இரு முனைகளை 'ச்சக்' என்று கலாவின் கழுத்தில் மாமரக் கிளை கிழித்ததனால் கோடு போல ஏற்பட்டிருந்த தழும்பின் மேல் பாய்ச்சினான். 'போலீஸ் போலீஸ் போலீஸ்' என்றஎழுத்துக்களுக்குக் கீழே கவர் போஸ்டரில் ட்ரம் அடித்து மைக் பிடித்து ஆடிய 'போலீஸ்' இசைக் குழுவினர் மேல் ரத்தம் தெறித்தது.

கலாவின் வாய் மூடியும் திறந்தும் கடைசி சுவாசத்தை வெளியேற்றிக் கொண்டிருந்த போது கணேஷ் பங்களாவுக்கு வெளியே காரை நடைபாதையோரமாக டயர் தேய படியாக ப்ரேக் போட்டு நிறுத்தினான். ஓட்டமும் நடையுமாக விரைந்து கொண்டிருந்த பனியன்காரியை இழுத்துக் காருக்குள் போட்டான்.

சில நிமிடத்துக்குப் பிறகு கார் சென்னையின் எல்லையைக் கடந்து தாறுமாறாக ஓடியது.

நள்ளிரவில் பெட்ரோல் வற்றிய கார் காய்ந்துபோன கண்மாய்க்குள் கிடந்தது. மேலே நட்சத்திர வானம்.

பின் ஸீட்டில் களைப்பினாலும் குழப்பத்தினாலும் தன்னையறியாமல் உறங்கிவிட்டவளைக் கணேஷ் கட்டிக் கொண்டு 'வலையில் சிலந்தி இருக்கிறது கூட்டில் பறவை வசிக்கிறது வீட்டில் மனிதன்... மனிதன் அப்புறம் என்ன மம்மீ...'' என்றான். ''மம்மீஈஈஈ'' என்று கதறினான். (முற்றும்)



''ஒரு வாரமா தலைவலி அதிகமா இருக்குன்னியே? என்ன ஆச்சு?''

''நேத்து அது பொறந்த வீட்டுக்குப் போயிடுச்சு!''

—ஜ. சந்தானம்,

''மட்டையுடன்தான் ஆடணும்னு ரூல்ஸ். இப்படிக் கத்தியை மட்டையா வெச்சு ஆட அனுமதிக்க முடியாது.''

—'சிவம்'



மெல்லிசை மன்னனே!
என்னுயிர் அண்ணனே!

என்
பாட்டுக்கள்
பட்டினி கிடந்த
பொழுது—
உன்
ஆர்மோனியம்
தான்
ஆகாரம் போட்டது!

நான்
அட்சரப் பாத்திரம்
ஏந்தி வந்தேன்—
அதில்
அன்னமிட்ட
அட்சயப் பாத்திரம்
நீ!

உன்
விரல்கள்
ஆர்மோனிய
வீதியில்
உலவும்போது—
வர்ண
மெட்டுக்கள்
வரிசை
வரிசையாக
நின்று
வணக்கம்
செலுத்து கின்றன!

உன்
உதடுகளில்
உட்கார வேண்டி
பல
தமிழ்ப் பாடல்கள்
தவம் கிடக்கின்றன!

ஏனெனில்—
நீ
உச்சரித்த
சொற்கள்....
புகழின்
உச்சத்திற்குச் செல்கின்றன!

உன்னிடம்
அடகு வைக்கப்பட்ட
ஆயிர மாயிரம்
காதுகள்—
இன்னமும்
மீட்கப் படாமலேயே
இருக்கின்றன!

ஒருதாய்
உன்னைப்
பெத்தெடுத்தாள்;
இன்னொரு தாய்
உன்னைத்
தத்தெடுத்தாள்!
அவள் தான்
இசைத் தாய்;
அவளை நீ
இசைத்தாய்!

நீ
சட்டையைத்
தைத்து
வைத்துக் கொண்டு—
அதன்
அளவிற்குப்
பிள்ளை பெறச்
சொல்லாமல்....
பெற்றெடுத்த
பிள்ளைக்குப்
பொருத்தமாகச்
சட்டை தைக்கும்
கெட்டிக்காரன்!

ஒரு
விலைவாசிப்
பட்டியலுக்குக் கூட
உன்னால்
வர்ண மெட்டு
அமைக்க முடியும்;
நீ
வார்த்தைகளைத்
தட்டிக் கொடுத்து
வேலை
வாங்குகிறாய்!
உன்
நாக்கு நதியில்
நெடு நேரம்
நீச்சலடித்தாலும்—
சொற்களுக்கு
களைப்பு வருவதில்லை;

உன்
ஸ்வரங்களை
ஸ்நேகிப்பதால்—
சாஹித்யங்கள்
சந்தோஷிக்கின்றன!

நீ
கட்டளைகள்
கற்பிக்கும் போது
வாசிப்பவர்கள்
மட்டுமல்ல;
வாத்தியங்கள்
கூட....
வியந்து
நோக்கு கின்றன!

உன்
பாட்டில் தான்—
ஆரோகணம்
அவரோகணம்
உண்டு;
புகழில்—
ஆரோகணம்
மட்டுமே;
அவரோகணம்
இல்லை!

[வானதி பதிப்பகம், சென்னை-17 அண்மையில் விழா எடுத்து வெளியிட்ட "பொய்க்கால் குதிரைகள்" என்ற வாலியின் புதுக்கவிதைகள் தொகுப்பு நூலிலிருந்து.]

# ஜூனியர் விகடனின் ஆசிரியர் பற்றி...?



✖ பெரியார்

✖ திருமதி பிரசன்னா ராஜன், கும்பகோணம்

? தி. மு. க. விலிருந்து விலகி அ. தி. மு. க. வில் ஆர். டி. சீதாபதி சேர்ந்ததால் நாட்டுக்கு என்ன நன்மை?

! தமாஷாவரியில்லாமல் ஒரு கேலிக்கையைப் பல்லாயிரக் கணக்கான தமிழர்கள் ரசிக்க முடிந்ததே. போதாதா?

✖ பூவை தங்கபாரதி, கோயமுத்தூர்

? யோவ் தாராக! நீரும் குமுதம் அரசுவும்தான் கேள்விகளுக்கு நீண்ட பதில்களைச் சொல்லி அறுக்கிறீர்கள்! ஏன் இப்படி?

! இது தெரியாதா, ஒய்! சுருக்கமான பதிலைச் சொல்லி அறுக்க வேண்டாமே, என்பதற்காகத்தான்!



✖ கார்த்திகேயன்

✖ தி. வன்னியபதி, கோ நகர்

? ஜூனியர் விகடன் ஆசிரியர் மதன் பற்றி?

! மேல் நாட்டு (Mad) பாதிப்பில் அவருடைய அசித கற்பனை ஜோக்குகள் ஸாரி, கொஞ்சம் ஓவர் அல்ல, ரொம்ப ஓவர்! இருந்தாலும் பக்காத் திருடன் பக்கிரிசாமி ரெட்டை வால் ரெங்கு ஆகியவர்களைத் தமிழகம் மறக்க முடியாதபடி செய்தவர். நல்ல அரசியல் கார்ட்டூனிஸ்ட் என்பதோடன்றி, சிறந்த எழுத்தாளர் என்பதையும் அண்மைக்காலத்தில் நிருபித்தார். பாராட்டுக்குரியவர் அவர் மட்டுமல்ல. அவர் தகுதியறிந்து நன்கு பயன்படுத்திக் கொண்டு, வளர உதவி, இன்று ஒரு புதுப் பத்திரிகையின் ஆசிரியர் பதவியையே தந்திருக்கும் எஸ். பாலசுப்பிரமணியமும்தான். மதன் உழைப்பு விகடனுக்கும் தொடர்ந்து இருந்து வரவேண்டும்.



✖ மதன்

✖ எஸ். எஸ். டி. ராஜன், சிறுதையூர்

? மார்கழி மாதம் வந்தால் உங்களுக்கு நினைவு வருவது என்ன?

! தெருவுக்குத் தெரு பக்திப் பாடல் என்ற பெயரால் அலறும் ஒலிபெருக்கிகள். அவற்றில் நான் பக்தியையும் உணரவில்லை. இசையையும் கேட்கவில்லை. பழுதுற்றுப் போன பிளேயர்களையும், கீரல் விழுந்த ரிகார்டுகளையும் வைத்துக் கொண்டு அடிக்கப்படுகிற லூட்டி... இசைத்தட்டைக் கொடுத்த கலைஞருக்கு இதைவிடப் பெரிய தண்டனை வேண்டாம். ஆண்டவனுக்கு இதைவிடப் பெரிய அபசாரமும் இல்லை.



✖ ராமச்சந்திரன்

✖ எம். இராஜேந்திரன், லால்குடி

? ஆந்திராவில் என். டி. ராமராவினை எதிர்க்க இந்திரா, மூப்பனார், அமிதாப்பச்சன், சிவாஜி கணேசன் போன்றவர்கள் தேவையா?

! வேண்டாமா பின்னே? என். டி. ஆர். வென்றால் மக்களின் சினிமா மோகம் என்று கூறிவிடலாம்; இந்திரா வென்றாலோ அன்னையின் வெற்றிக்கு அணில் பணி செய்ததாக ஒவ்வொருவரும் மார் தட்டலாம். நழுவ விடுவார்களா நல்வாய்ப்பை?

✖ கே. நரசிம்மன், புரசைவாக்கம்

? டி.ஐ.ஜி. கார்த்திக் பற்றி குண்டுராவ் மௌனம் சாதிப்பதேன்?

! கார்த்திகேயன் காரியங்கள் தவறானவையானதால் அதுபற்றி வாய் திறந்தால்

# நீங்கள் கேட்டவை — தராசு

வம்பில் மாட்டிக் கொள்வார் மாநில முதல்வர். கார்த்திகேயன் நடத்தை ஒன்றே போதும் இந்தத் தேர்தலின்போது ஆட்சியிலுள்ளோரின் அதிகார துஷ்பிர யோகம் எவ்வளவு என்று உணர்த்த.

⌘ வி. அனிலா, டோம்பிவிலி

? பெரியார் வளர்த்த பகுத்தறிவு இயக்கத்தின் தற்போதைய நிலைமை என்ன?

! பகுத்தறிவு இயக்கம் என்பது ஆக்கப்பூர்வ மானது. பாஸிடிவ் அப்ரோச் உள்ளது. இப்போது அதுவே பிராமணர் எதிர்ப்பு இயக்கமாக மாறிவிட்டது. இது துவே ஷத்தை வளர்க்கும் நெகடிவ் அணுகுமுறை உடையது. அதனால் பிராமணர், பிரா மணரல்லாதார் ஆகிய இருதரப்பினருக் குமே தீமைதான்.

⌘ மனோபாரதி, பாண்டிச்சேரி

? தமிழன் என்று தலைநிமிர்ந்து நிற்பான்?

! நூறு சதம் மின்வெட்டு அறிவித்துள்ள மின்துறை அமைச்சர் ராஜினாமா செய் திருந்தால் தமிழன் தலைநிமிராவிடினும் தலைகுனிவாவது ஏற்பட்டிராது.

⌘ ஏந்தல் ஆர். இளங்கோ, திருச்சி

? அரசியல்வாதிகளுக்கு மனமு பெல்விக்கும் ஆற் றல் இருந்தால்?

! மனோபாரதி கேள்விக்கு என் பதில் வேறு விதமாய் இருந்திருக்கும்!

⌘ எஸ். சௌரிராஜன், லெட்சுமாங்குடி

? தமிழ்ப் பண்பாட்டிலிருந்து சில பெண்கள் விலகி நடப்பது நாகரிகமாகுமா?

! பண்பாடு என்பது நிலையான ஒன்றல்ல; காலம் செல்லச் செல்ல மாறுபாடுகளை ஏற்கின்ற ஒன்றுதான் அது. நாகரிகமும் அப்படியே. அந்தந்தக் காலகட்டத்துக்கு உரிய பண்பாடு. நாகரிகத்திலிருந்து விலகி நடப்போர் எக்காலத்திலும் உண்டு. அவர்கள் பெண்கள் மட்டுமல்ல. அடிப் படை தர்மங்களைக் காத்து அவற்றுக்கு உட்பட்டு நடப்பதுதான் முக்கியம். இந்த அடிப்படை தர்மங்கள் மனித சமுதாயம் முழுமைக்கும் ஒன்றே.

⌘ என். மோகன், சேலம்-8

? கடவுளுக்கு மருதாணி பூ வைத்துக் கும்பிட லாமா?

! முதலில் மன மலரைக் காணிக்கையாக்கி விடத் தீர்மானித்துக் கொள்ளுங்கள். பிறகு அர்ச்சனை எந்தப் பூவினாலும் செய்ய லாம்.

⌘ துரை அன்புராஜ், டால்மியாபுரம்

? பாலகுமாரனின் இரும்பு குதிரைகள் முன்னேற் டம் பார்த்த உங்கள் கணிப்பு என்ன?

! இரண்டு லெக்கில் ஜெயிக்கும்.

⌘ ஆர். கே. விக்னேஷ், மேலகிருஷ்ணன்புதூர்

? மின்சாரத் தட்டுப்பாட்டால் நமது கல்வி எந்த அளவு பாதிக்கப்பட்டிருக்கிறது?

! பவர் கட் பத்திரிகைகளுக்கு இல்லை என்ப தால் பத்திரிகை தன் பவரை இழந்துவிடக் கூடாது என்பதில் கல்வி கவனமாக இருக் கிறது.

⌘ லட்சுமிசிவம், சென்னை-7 ★

? தலைவலி போய்த் திருகுவலி வந்த கதை ஒன்று சொல்லுங்களேன்!

! பம்பாயை யொட்டிய கடல் பகுதியில் (பாம்பே ஹை) பெட்ரோலியம் கண்டு பிடித்து இருக்கிறார்கள். இதை யொட்டி எரிபொருளாகப் பயன்படக் கூடிய வாயு வும் வெளிப்படுகிறது. இந்தவாயுவை சிலிண்டர்களில் நிரப்பி இல்லங்களில் அடுப் பெரியப் பயன்படுத்தலாம். ஆனால் இந் தப் பொறுப்பை பாம்பே காஸ் கம்பெனி யிடம் விடுவதா அல்லது பம்பாய் மாநக ராட்சியிடம் விடுவதா என்று அரசாங்கம் இன்னும் முடிவெடுக்காததால் இது தொடர்பாய் ஒரு வேலையும் நடக்கவில்லை! கடந்த ஐந்து ஆண்டுகளாக, ஓராண்டுக்கு ரூ. 36 கோடி பெறுமானமுள்ள வாயு தன் டத்துக்கு நடுக் கடலில் எரிக்கப்பட்டு வீணாகிக் கொண்டிருக்கிறது. இதே நேரத் தில் இல்லங்கள் தோறும் குடும்பஸ்தர்கள் காஸ் சிலிண்டர் கிடைக்காமல் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ...தலைவலி போய்த் திருகுவலி வருவதா வது? இங்கு தலைவலியோடு சேர்ந்து திருகு வலியையும் அனுபவித்துக் கொண் டிருக்கிறோம்!

⌘ நந்தலாலா, பண்ணுருட்டி

? சிக்கனம் பற்றிப் போதனை செய்த காந்தியைப் பற்றிய படம் தயாரிக்க இத்தனை செலவு செய் திருக்க வேண்டுமா?

! அவர் மகாத்மாவாக விளங்குவதில் சிக்க னம் காட்டியிருந்தால் இத்தனை செல வாகியிராது. நிற்க, 22 மிலியன் டாலர் செலவழித்தால் என்ன ஸார்? அந்தச் செலவு இன்றி இந்த மாபெரும் இதி காசத்தைத் தயாரித்திருக்க முடியுமா, உலகம் போற்றும் விதமாக! மேலும், செலவைப் போல் பல மடங்கு ஈட்டித் தரப் போகிறதே! அதே நேரத்தில் அகில உலகிலும் அண்ணலின் பெருமை பேசப்படப் போகிறதே! பார்த்தே ஆக வேண்டிய திரைப்படம் என்று நியூஸ்வீக் தன் கட்டுரையைத் தொடங்குகிறதே! அட்டன்பரோவின் 20 ஆண்டுக் கனவு நனவாகிறது. எத்தனை எதிர்ப்புகள், ஏமாற்றங்களைச் சமாளித்து மாபெரும் சாதனை புரிந்திருக்கிறார் இந்த வீரர்! பிரிட்டிஷ்காரர்களையே குறைகூறிப் படம் எடுக்கிறோமே என்று இந்தப் பிரிட்டிஷ் காரர் நினைத்தாரா? சத்திய சோதனை யில் வெற்றி கண்டிருக்கிறார்!

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

லட்சுமிசிவம்,
10, வேங்கடாசல முதலி தெரு,
புரசைவாக்கம்,
சென்னை - 600 007.

# தலையங்கப் பணி தொடரட்டும்

அன்புடையீர்,

12-12-82 கல்கி இதழில் வெளியான இங்கே கேட்ட குரல் என்ற தலைப்பில் ''எங்கேயோ கேட்ட குரல்'' 100வது நாள் விழா பற்றிய தலையங்கத்தையும், 26-12-82 கல்கி இதழில் சினிமாவுக்கு ஒரு தலையங்கமா? என்ற கேள்விக் குறியோடு அன்பர் எஸ். கண்ணன் தலையங்கத்துக்கே அது ஒரு தலைகுனிவு என்று குறிப்பிட்டிருப்பதையும் பார்த்தேன். இது பற்றி அன்பர் கண்ணன் அவர்களுக்கும், அவரைப் போன்ற மற்றவர்களுக்காகவும் இக்கடிதத்தை நான் எழுதுகிறேன். இன்றுள்ள அமெரிக்க ஜனாதிபதி ரீகனும், தமிழக முதல்வர் எம். ஜி. ஆர். அவர்களும் சினிமாவின் உதவியினால்தான் இப்பெரும் பதவிக்கு வந்தார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது.

நான் சோவியத் யூனியன் திரைப்பட விழாவுக்குச் சென்றிருந்தபோது, சினிமாவினால் சாதிக்க முடியாதது எதுவுமே இல்லை, ஆகவே அதை அலட்சியப்படுத்தாதீர்கள் என்ற வார்த்தைகள் அடங்கிய சுவரொட்டிகளைத் திரும்பும் இடமெல்லாம் பார்த்தேன். அத்தகைய மகத்தான சக்திவாய்ந்த சினிமா விழாவுக்குத் தலையங்கம் தீட்டியதை தரக்குறைவாகக் கருதும் அன்பருக்காக நான் வருத்தப்படுகிறேன். எங்கேயோ கேட்ட குரல் படம் வெளியானபோது வழக்கமான 'பார்முலா' மசாலாக்கள் இதில் எதுவுமே இல்லை. ஆகவே இது படுதோல்வி படைத்துவிடும் என்றுதான் திரையுலகில் பரவலாகப் பேசப்பட்டது. அக்கருத்தை முறியடித்து, 100 நாட்கள் ஓடி விழா எடுத்ததும், அதற்குக் கல்கி தலையங்கம் தீட்டியதும் தமிழன் பெருமைப்பட வேண்டும் என்பது என்னுடைய அழுத்தமான கருத்து. இவ்வகையில் கல்கி பத்திரிகைக்கு எதிர்ப்பு ஏற்பட்டிருக்கும் நிலை புதியதல்ல. மனிதனுக்கு மன்னிக்கும் மனப்பான்மை வேண்டும். பழி வாங்கும் உணர்வு கூடாது என்ற கருத்துப்பட நான் சில ஆண்டுகளுக்கு முன்பு எடுத்த 'என்ன தான் முடிவு?' என்ற படத்திற்கு உரிய விமர்சனத்தையும், என்னுடைய புகைப் படத்தையும் கல்கி தன் அட்டையில் பிரசுரித்திருந்தது. அப்போதுகூட இதுபோன்ற ஏளனங்களும், எதிர்ப்புகளும் கல்கிக்கு ஏற்பட்டிருந்தது எனக்கு நன்றாகத் தெரியும். என்னதான் முடிவு படம், நான் எதிர்பார்த்த அளவுக்கு ஓடவில்லை என்றாலும், ராஜாஜி அவர்களைக் கௌரவ ஆசிரியராகக் கொண்ட கல்கி பத்திரிகை முகப்பு அட்டையில் என்னுடைய உருவப் படம் வெளிவந்ததின் காரணமாகத்தான் பக்திப் படங்களையும், குடும்பச் சித்திரங்களையும் உருவாக்க வேண்டும் என்ற ஆர்வமும் துடிப்பும் எனக்கு ஏற்பட்டது. நல்லன அல்லாதவற்றைப் பாராட்டாமல் விட்டுவிடலாம். ஆனால் நல்லவற்றைப் பாராட்டாது விட்டு விட்டால், அதற்குரிய விளம்பரத்தைக் கொடுக்கத் தவறிவிட்டால் நல்ல கலைகளோ, கருத்துக்களோ வளரவே முடியாது. ஆகவே இதுபோன்ற தங்களது தலையங்கப் பணி தொடர்ந்து நடக்க வேண்டும் என்பது எனது பணிவன்பான வேண்டுகோள்.

சென்னை-93

அன்பன்

**கே. எஸ். கோபாலகிருஷ்ணன்**

(இயக்குனர்)



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani

Editor: K. Rajendran

# ரசிப்புகள் பல விதம்... ஆனால்...



























எல்லோரும் ஒரே விதமாய் ரசிப்பது

## நரசுஸ் காபி!



ஜீவனுள்ள ஒரே காபி!

## நரசுஸ்

காபி!



நரசுஸ் காபி கம்பெனி
சேலம் 636 007.
கிளைகள் : தமிழ்நாடெங்கும்.

ADWAVE/NCC/2166

